# பிறநாட்டுப் பேரறிஞர்



ஆசிரியர் :

ஹரிஹர இராமசந்திரன், B. Sc., (Hons.)

(பெங்களூர் விஞ்ஞானக் கழகப் பௌதிக ஆராய்ச்சியாளர்)




பதிப்பாளர் :

**M. R. அப்பாதுரை, B. A.,**

13, முத்தியாலு செட்டித் தெரு,

புரசைப்பாக்கம், சென்னை

பதிப்புரிமை]   1945   [விலை ரூ.1-4-0



'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'

அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக

மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு

அன்புடன் அளிக்கப்பட்டது.

**27–1–1979**

# முகவுரை

'நூலுக்கு முகவுரை எதற்கு?' என்பவர்களுள் நானும் ஒருவன்! ஆசிரியர் நூலை எழுதி முடித்த பிறகு கடைசியில் எழுதப்படுவதாயும் நூலைப் படிப்பவரும் பெரும்பாலும் படிக்காமல் விடுவதாயும் உள்ள ஒன்றினுக்கு 'முகவுரை' என்று பெயரிட்டு வழங்குவது வேடிக்கையே!

நூலை விளக்கவே முகவுரையாம் என்று சொல்வதற்குமில்லை. ஏனெனில், பெர்னார்ட்ஷா[1] அவர்களின் முகவுரைகளெல்லாம் அவரது நாடகங்களால் விளக்கப்பட்ட முகவுரைகளேயன்றி, நாடகங்களை விளக்க வந்த முகவுரைகளல்ல! ஆகவே, பெரும்பாலும் அச்சுப்பிழை, அனுபவக் குறைவு, இவருக்கும் அவருக்குமாகக் கடப்பாடு என்பவைகளையே விவரிக்கும் மன்னிப்பு விண்ணப்பங்களுக்கும், மெய் விதிர்ப்புக்களுக்கும், நன்றியறிவிப்புக்கும் முகவுரை என்பது ஏன் பெயராம் என்பது எனக்கு இன்னமும் புலப்படாததே!

'இப்படியொன்று சொல்லிக்கொண்டே முகவுரை எழுதுவதும் எதற்காக?' என்று இதைப் படிப்பவருக்கு (அவர் உளரேல்!) தோன்றக் கூடும். முகவுரை எழுதியது ஏன் என்பதை முகவுரையிலேயே கூறிவிடுகிறேன்:

இப்புத்தகத்தில், 'நூல்' என்னும் பகுதியை மிக இலக்கணமாகத் திருவாளர் அப்பாதுரைப்

1. Bernard Shaw

**பிள்ளையவர்கள்** அச்சிட்டு முடித்து, நூல் வெளியீடுகளால் தமிழன்னைக்கு மிகப்பெருந்தொண்டாற்றி வரும் திருவாளர் **வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்கள்** மேற்பார்வை பார்த்து அழகுறத் திருத்தி முடித்த தருணம், "முகவுரை தயாராய்விட்டதா?" என்ருர் நண்பர் அப்பாதுரைப் பிள்ளையவர்கள்.

அதே கணத்திலேதான் நமக்குச் சட்டென்று ஞாஞேதயமானதும் அதிலிருந்து இரண்டு உண்மைகள் தோன்றியதும்! அவைகளை உணர்த்துவதற்கென்றே இம்முகவுரையாம்! இதுவே உண்மை! வேண்டுமாளுல் முழுதும் படித்துப் பாருங்கள்!

நான் சொல்ல வந்த உண்மைகளாவன:

'**வாழ்க்கை என்பது மிகப் பெருத்த அனுபவமாம்.** அதன் வாயிலாகக் கிடைத்தற்கரிய அனைத்தும் நமக்குக் கிடைத்திருக்கின்றன. உணர்ச்சியறிவிப்பதற்கென்று ஐம்புலன்களும் ஐம்பொறிகளும், முன் சென்றவர்களது கருத்துக்களை நாமும் உணர்வதற்கென்று மொழியும் நூல்களும் அமைந்திருக்கின்றன. வாழ்க்கையை இன்பப் பொழிலிலும் அறிவின் ஒளியிலுமே கழிப்பதற்கு வேண்டிய ஆயிரஞ் சாதனங்களில் ஒன்றே குறைய, எஞ்சிய அனைத்தையும் நம்மில் ஒவ்வொருவரும் பெற்றிருக்கிருேம். எஞ்சி நிற்பனவே உண்ணச் சிறிது சோறும், உடுக்கப் போதிய உடையும், படுத்துறங்கச் சிறிது இடமுமாம்.

இந்நூலில் நான் எழுதுவதாக மேற்கொண்ட பேரறிஞர் ஒவ்வொருவரும் இப்பேருண்மையை நன்கு அறிந்தவரேயாவர். வாணுள் முழுவதும் காலத்தெய்வத்துடன் வாது செய்து சாகா வரம் பெறுவதிலும், அறியாமைக் காட்டைச் சுட்டெரிப்பதிலுமாக அன்னூர் காலத்தைக் கழித்தனரே தவிர, உண்டிக்கும் உடைக்குமாக உழல்வதை அன்னூர் அறிந்தவரேயல்லர்.

நான் கண்டதாய பிறிதோர் உண்மை பின்வருவது :

நிகழ்காலத்தை நான் மறந்தேன். இனி ஓராயிரம் வருஷங்களில் உலகுக்குள்ள தோற்றத்தை என் கண்கள் கண்டன! என்னே அக்காட்சியின் இன்பம்!

அத்தோற்றத்தில் மாந்தரனைவரும் அறியாமை நீங்கினவராவர்; மூட நம்பிக்கைக்கு அடிமைப்படாதவராவர்; தொன்மைக்கு அஞ்சாதவராவர்; குறுகிய மனப்பான்மைக்கு உட்படாதவராவர்.

அங்கு நின்ற திருக்கோயில்கள் மூன்றினை என்னென்பேன்! அவைகளுள் ஒன்று இலக்கியத்திலும் கலையிலும் சிற்பத்திலும் ஒளிரும் **அழகுத்தெய்வத்துக்காம்**.[1] மற்றொன்று, விஞ்ஞான சாஸ்திரங்களிலிருந்து தோன்றும் **அறிவுத்தெய்வத்துக்காம்**.[2] இன்னொன்று, ஆழ்ந்த சிந்தனைக்கும் விரிந்த நோக்கத்துக்குமே தென்படுவதான **ஞானத்தெய்வத்துக்காம்**.[3]

---

1. Beauty (the Arts and Literature)
2. Knowledge (the Sciences)
3. Wisdom (the Philosophies)

அக்கோயில்களை நான் மட்டுமே காண வேண்டுமென்பதில்லை! பிறர் அவற்றைக் காண்பதும் கனவில் மட்டுமே என்பதுமில்லை!

அக்கோவில்கள் எப்படியும் கட்டப்படவேண்டும். அவை கட்டப் பெறுவதற்காகவே இத்தனை ஆயிரங்கோடி மக்கள் இத்தனை ஆயிர வருஷங்களாய் உழைத்து வந்ததும், உழைத்து வருவதும், இன்னும் ஆயிர வருஷங்களுக்கு ஓயாது உழைக்க வேண்டுவதுமாம்!

அக்கோவில்களைக் கட்ட அறிவாளிகள் தேவை! திருப்பணி செய்யப் பக்தர்கள் தேவை! ........ஆயிரங் கோடிகோடியாகத் தேவை!

மண்ணை வெட்டுவதற்கென்று சிலர், அம் மண்ணைச் சுமப்பதற்கென்று சிலர், நீர் பெய்து சேறுக்கச் சிலர், கல்லறுக்கச் சிலர், சூளையில் வைக்கச் சிலர், சுட்டுச் செங்கல்லாக்கச் சிலர்— என்று அறிஞர் பலர் தேவை.

கோவில் கட்டச் சுண்ணும்புக்கல் தேவை! சுண்ணம் அரைப்பவர்கள் தேவை!

தேவாலயம் சமைக்கக் கொல்லத்துக்காரர்கள் தேவை! மரத்தச்சர்கள் தேவை! கல்தச்சர்கள் தேவை! இரும்புக் கொல்லர்களும் தேவை!

ஓவியம் வரையவும், வண்ணம் தீட்டவும், சிலை செதுக்கவும் ஓராயிரங் கோடிப் பேர் தேவை!

இவருள் ஒவ்வொருவர் செய்வதும் திருப்பணியே. இவர் உயர்ந்தவர் அவர் தாழ்ந்தவர் என்பது இங்கு இல்லை. இவர் இல்லையாயின், அவர் மட்டும்

என் செய்வது! அவர் இல்லாது இவர்தாம் என் செய்வது!

அக்கோவில்கள் எப்படியாயினும் கட்டப் பட வேண்டும். **அத்திருப்பணிக்கு நம்மாலானது உதவுவதே வாழ்க்கையின் பயனும்.**

இப்பேருண்மையை நினைவுறுத்துவதற்கு இப்புத்தகம் உதவி செய்வதானால்—'வந்து விட்டீரா வழக்கத்திற்கு!' என்பீர்கள். இல்லை! ஆம்! நாம் வந்தது முகவுரையின் முடிவுக்கே!

விஞ்ஞானக்கழகம்,
பெங்களூர்.*
23-12-'44

ஹரிஹர இராமசந்திரன்

* The Indian Institute of Science, Bangalore.



# பொருளடக்கம்


| பொருள் | | பக்கம் |
|---|---|---|
| 1. கலீலியோ கலிலி | .... | 1 |
| 2. சார்லஸ் இராபர்ட்டு டார்வின் | .... | 18 |
| 3. பெர்ஸி பிஷே ஷெல்லி | .... | 37 |
| 4. பெர்ல் ஸைடன்ஸ்ரைக்கர் பக்கு | .... | 55 |
| 5. ரொமேன் ரோலந்து | .... | 74 |
| 6. கார்ல் ஹைன்றிஷ் மார்க்ஸ் | .... | 91 |
| 7. அனுபந்தம் | .... | 113 |




# பிறநாட்டுப் பேரறிஞர்

## 1

## கலீலியோ கலீலி[1]

[உலக முன்னேற்றத்திற்கு முக்கியமாக வேண்டப்படுவது விஞ்ஞான வளர்ச்சியே யாம். விஞ்ஞானத்தை வளர்ப்பவையோ சோதனையும், ஆராய்ச்சியுமே. இப்பெருண் மையை முதலில் எடுத்துக்காட்டிய பெருமை கலீலியோவுக்கே உரியது. வான நூலுக்கு வேண்டப்படும் தூரதிருஷ்டிக் கண்ணாடியை முதலில் அமைத்த பெருமையும் அவரதே யாம்.]

கலீலியோவுக்கு வாய்த்துள்ள பெருமைகள் ஒன்றிரண்டல்ல; ஒரு தரத்தனவுமல்ல.

கலீலியோ விஞ்ஞானத்தின்[2] வித்து! ஆராய்ச்சியின்[3] ஆரம்பம்! சோதனை முறைக்கு[4] ஆதாரம்! வான நூலுக்குக்[5] கண்ணும் ஒளியும் அளித்த தனி வள்ளலும் அவரே! பௌதிகத் திற்குப்[6] பாதையிட்டவராய்க் கருதப்படும் நியூட்டனுக்குக்[7] கைவிளக்காய் நின்று, குன்றுச் சுடரளித்தவரும் அவரே!

---

1. Galileo Galilei
2. Science
3. Research
4. Experimental method
5. Astronomy
6. Physics
7. Sir Isaac Newton

நியூட்டனுக்குப் பின் வந்த அறிவாளர்களுட் பெரியோரான ஹைஹென்சு[1], பாரடே[2], தாம்சன்[3], மிலிகன்[4], ரூதர்போர்டு[5], போர்[6], கியூரிகள்[7], இராமன்[8], அயின்ஸ்டீன்[9] என்னும் அனைவருக்கும் இன்றைக்கும், பின் என்றென்றைக்கும் அவரே உண்மைக்கு வழி காட்டி; அறிவின் வற்றாத ஊற்று; அனைவரும் வாயாரப் புகழ்ந்து போற்ற வல்ல புதுமைத் தெய்வமுமாவர்!

* * *

கலீலியோப் பிறந்த குடும்பம் சாதாரணமான தன்று; தலைமுறை தலைமுறையாய்ப் பெயரும் புகழும் படைத்துப் பெருமிதமாய் வாழ்ந்து பின்னர் ஏதோ விதிவசத்தாற் சீரழிந்து, வறுமையால் வாடிய குடும்பம் அதுவாம். எத்தனை வறுமையிடையும் அது கணிதத்தையும் கீதத்தையும் பெரிதும் காதலித்துப் பரிபாலித்ததாம். கலீலியோவின் தந்தையாரான வின்ஸென்ஸியோ கலீலி[10], அறிவிற் சிறந்தவர்; கணிதத்தில் மேதை; சங்கீத சாஸ்திரத்தில் நல்ல தேர்ச்சியுள்ளவர்; ஆயினும், வறுமையின் சிறுமையையும், ஏழ்மையின் எளிமையையும் அவர் நன்கு அறிந்தவராவர்.

வியாபாரத்தால் கிட்டும் ஊதியத்தில் ஒரு சிறிதும் வித்தியாபாரங்கதர்களான பண்டிதர்

---

1. Christopher Huygens
2. Michael Faraday
3. Sir J. J. Thomson
4. Robert Andrew Millikan
5. Lord Rutherford
6. Niels Bohr
7. Pierre Curie, Marie Curie
8. Sir C. V. Raman
9. Albert Einstein
10. Vincenzio Galilei

களுக்கில்லை என்பதைத் தம் வாழ்க்கை அனுபவத்தில் கண்டு கண்டு மனம் கசந்திருந்த அவர், தம் மைந்தர் கலைமங்கைமீது காதலுற்றுத் தம்மைப் போலவே வறியராவதைச் சிறிதும் விரும்பினாரில்லை. செல்வந்தராதல் தம் மைந்தருக்காவது வாய்க்கட்டும் எனக் கருதி, அவர் கலீலியோவைக் கம்பள வியாபாரத்தில் புகுத்தவே எண்ணமிட்டிருந்தார். தம் மைந்தருக்கு உயர்தரப் படிப்பு அளிக்கும் எண்ணம் அவருக்குக் கனவிலும் இல்லை.

ஆனால், நடந்தது வேறு: பள்ளியிற் பயிலுங்காலத்திலேயே கலீலியோவின் அறிவு இருட்டிலும் ஒளிரும் இரேடியம்[1] போலச் சுடர்விட்டொளிர ஆரம்பித்தது. சோதனை[2] நடத்துவதில் இடையறாத மனக்கிளர்ச்சியும், கருவிகள் அமைப்பதில் தனித்த கைவன்மையும்,[3] கலீலியோவுக்கு இளமையிலிருந்தே உடன் பிறந்தவை ஆயின. வாளொத்த புத்தி கூர்மையைத் தம் மைந்தரிடம் கண்ட வின்ஸென்ஸியோ, அவர் கம்பள வியாபாரியாவது சரியன்று என்று முடிவு செய்தார்.

எனினும், அவர் கலீலியோவுக்குக் கணிதம் கற்பிப்பதாயில்லை. வைத்தியத் தொழிலில் அறிவுக்கு வேலை உண்டு என்பதுடன் கைப்பொருளுக்கும் குறைவில்லை எனக் கருதி, அவர் தம் மைந்தரை வைத்திய கலாசாலைக்கு அனுப்பி வைத்தார்.

---

1. Radium 2. Experiment 3. Manipulative ability

ஆனால், கலீலியோ வைத்தியமும் கற்பதா யில்லை. கணித நூலின் பொலிவும், பௌதிக நிகழ்ச்சிகளின் விநோதங்களுமே கலீலியோவின் மனத்தைக் காந்தமெனக் கவ்வி இழுத்தன. 'வானில் பறக்க வல்ல குதிரை வீதியில் நடவாது,' என்பதை வின்ஸென்ஸியோவும் நன்கு அறிந்து கொண்டார்.

உடனே அவர் கலீலியோவுக்கு முழு மனத்துடன் கணிதம் கற்பிக்கலானார். மேன்மேலும் கணிதம் பயின்று பட்டம் பெறும் கருத்துடன் அவர் கலீலியோவை உயர்தரக் கலாசாலைக்கு அனுப்பிவைத்தார். ஆனால், கலீலியோ கணிதத்தில் உயர்தரப் பட்டம் பெறுவது நடைபெற இல்லை. காரணம் வறுமையே! வின்ஸென்ஸியோ என்ன செய்தும், அவர் புதல்வர் கணிதம் பயிலுவதும், அவரைப்போல வறுமையிடமே வாடுவதும் நின்றபாடில்லை!

* * *

கலீலியோவின் சரித்திரத்தில் கெடுபால்டோ டெல் மாண்டி[1] என்பவருக்குத் தனியிடம் உண்டு. கம்பருக்குச் சடையப்ப வள்ளல் உதவி செய்தது போலக் கலீலியோவுக்கு கெடுபால்டோ டெல் மாண்டி உதவி செய்பவரானார்.

அவர் கலீலியோவிடம் வைத்த நன்மதிப்பும் அவருக்கு அளித்த ஆதரவும் பொருளுதவியும் குறிக்கற்பாலவை. அவரது நன்கொடை பெற்றே

1. Guidubaldo del Mante

கலீலியோ நான்கு வருடம்[1] ஆராய்ச்சி நிகழ்த்தி வந்தார்.

கலீலியோ கணித போதகாசிரியரானதும் அவ்வள்ளலின் சிபாரிசினுலேதான். அன்றேல், கல்லூரிப் பட்டம்பெருத ஒருவர், பைசா[2] நகரக் கல்லூரியில் கணிதபண்டிதராவது முடிந்திராது. தொழிலில் அமர்ந்தபிறகும், கலீலியோ அவ்வள்ளலிடமிருந்து பொருளுதவி பெறுவது நிற்கவில்லை. ஏனெனில், கலீலியோவுக்கு மாதச்சம்பளம் ரூபாய் பதினைந்துதான்! உலகத்து அறிஞர்களுள் முதலிடம் பெற்ற கலீலியோவுக்குப் பைசா நகரக் கல்லூரி மனமுவந்து அளித்த பெருத்த தொழிலூதியம், வருடத்திற்கு 13 பவுன்களே என்பது குறிக்கத்தக்கதாகும்!

அக்கல்லூரியில் கலீலியோ இரண்டு ஆண்டுகளே தங்கியிருந்தார். உடன் இருந்த சகபாடிகளின் பொருமையும் நச்சரிப்புமே கலீலியோ அப்பதவியை நீத்துப் படுவா[3] நகருக்குப் பிழைப்பை நாடிச் செல்ல ஏதுவாய் நின்றன.

நல்ல வேளையாக, படுவா நகரில் கலீலியோவுக்கு அதிகத் தவக்கமின்றி வேலை கிடைத்தது. படுவாநகரக் கல்லூரியில் கணித பண்டிதருக்குச் சம்பளம் மாதம் ரூபாய் முப்பத்தைந்து! மாதச் சம்பளம் ரூபாய் பதினைந்திலிருந்து முப்பத்தைந்து ஆவது அதிர்ஷ்டமல்லவா! கலீலியோவை இனி அதிர்ஷ்டசாலி என்றே சொல்லவேண்டும்!

---

1. (1585—1589) 2. Pisa 3. Padua

அக்கல்லூரியில் அவர் பதினெட்டு ஆண்டுகள்[1] கணித போதகாசிரியராய் இருந்தார். அக்காலம் அவர் வாழ்க்கைச் சரித்திரத்தின் முக்கியமான பகுதியாகும்.

கலீலியோவின் அறிவு முதிர்ச்சி பெற்றதும் அந்நாளிலேதான்; அவர் தம் பேராற்றல்களை அறிந்து, சாகாமை என்னும் பெரும்பதத்தை நாடி விடாமுயற்சி செய்ய ஆரம்பித்ததும் அக்காலத்திலேதான்; அவர் கணிதத்தில் தேர்ந்ததும் பௌதிகத்தில் பல சோதனைகளை நடத்தி எத்தனையோ நூதனங்களை விளக்கியதும், கருவிகளமைப்பதில் அபாரத் தேர்ச்சி பெற்றுத் தூரதிருஷ்டிக் கண்ணாடியை[2] அமைத்ததும் வானசாஸ்திரத்திற்கு ஊன்று கல் நாட்டியதும் அவ் வாழ்க்கைப் பகுதியிலேதான்.

'கல்லூரிப் போதகாசிரியராய் இருந்த ஒருவர், திடீரென்று என்றும் அழியாப் புகழுக் குரித்தாய சிறந்த விஞ்ஞானியராயும், முதிர்ந்த அறிஞராயும் மாறினது எவ்வாறு?' எனச் சிலர் வினவலாம். இவ்வினாவுக்கு விடையளிப்பது எளிதன்று. எனினும், கீழ்க்காணும் விடையில் தவறு ஏதும் இல்லை என்றே நம்புகிறோம்:

கலீலியோப் போன்ற பேரறிஞர்களைப் பிறருக்குக் கடமைப்பட்டவர்களென எண்ணுதல் சரியன்று. அத்தகைய பேரறிஞர்கள் கடமைப்பட்டதெல்லாம் தத்தமக்கே!

---

1. (1592—1610) 2. Telescope

அறிவென்னும் சுடர், ஒவ்வொருவரும் தத்தாமே ஏற்ற வேண்டிய சுடராம். பிறர் ஏது செய்தும், சுடர் பற்ருது! விளக்கைத் துலக்கிய பெருமை சிலரையும், விளக்கிற்கு எண்ணெயிட்ட பெருமை மற்றும் சிலரையும், விளக்கைத்தூண்டிய பெருமை இன்னும் சிலரையும் சென்றடையுமே தவிர, ஞானச் சுடரை ஏற்றிய பெருமை அவரவருக்கேயுரியதாம்! இருளகற்றி ஒளி வீசும் பெருமையும் அவரதேயாம்!

எனினும் அறிவின் வளர்ச்சிக்கு ஏதுவாய மனவமைதியும் அவகாசமும் அமையவேண்டும். அன்றேல், அறிவென்னும் மலர், காய்த்துப் பழுத்துக் கனிதல் இல்லையாம். தனிமையும் ஆழ்ந்த சிந்தனையும் இல்லையாயின், அறிவின் முதிர்ச்சியும் இன்றே!

மேற்சொன்ன வசதிகளனைத்தும், கலீலியோவின் படுவா நகர வாழ்க்கையில் செவ்வனே அமைந்திருந்தன. அதுபற்றியே அவ்வாழ்க்கைப் பகுதியை முக்கியமானதென்று நாம் குறித்தோம்.

* * *

46 வயது முதல் 78 வயது வரை உள்ளதாய கலீலியோவின் எஞ்சிய வாழ்நாளைத் தொகுப்பது எளிதன்று. அதை நவரசங்களும் ததும்பிய பெருத்த நாடகமாகக் கருதுவதும் சரியே.

அறிஞரை என்றும் எள்ளி இகழ்ந்து வரும் அந்தக உலகம், சரேலென மின்னலின் பேரொளி போன்ற கண்ணொளி பெற்று, இரண்டொரு

நாள் கலீலியோவை வானவனாகவே கருதி விண்ணிடைப் பொருத்தித் துதித்ததும், அம்மின்னலின் ஒளி மறைய அது மீண்டும் பிறவிக் குருடாகி எதுவெதுவோ செய்து அவரைத் துன்புறுத்தியதும், அகங்காரம் ஆணவம் மதம் மாற்சரியம் என்னும் கொடு விலங்குகளும் விஷஜந்துக்களும் நிரம்பிய அறியாமைக் காட்டிடையே அறிஞர் ஒருவர் அகப்பட்டுத் தனிமையில் தவித்ததும், கேட்பாரற்றுத் தனிமையில் கதறி யழுததும், கண்ணீரைக் கடலென உகுத்ததும்....நாடகத்திலும் நாடகமேயாம்!

பல வருடக்கணக்காக உழைத்துச் சோதனை செய்து தெரிந்துகொண்ட உண்மைகளையும் ஆராய்ச்சிகளையும் கலீலியோ வெளியிட்டது தான் தாமதம்! தீதும் நன்றும் அவரை உடனே சூழ்ந்துகொண்டன.

இவ்வெளியீடுகளினால் அவருக்கு ஏற்பட்ட சீரும் சிறப்பும், சிறுமையும் சிறைவாசமும், அரண்மனைகளில் அறுசுவை உண்டியும் தனியறைகளில் உபவாசமும், அறிஞர்களிடையே உபசாரமும் இருட்டறைகளில் தனியடைப்பும், அறிவின் எல்லை என்ற பெயரும் அழியாப் புகழும், மதங்களுக்குத் தீராத் தொல்லை என்ற பட்டமும் வசை மொழியும் — அம்மம்ம, தொகுக்கவும் முடிவனவோ!

நாம் இவைகளைத் தொகுக்கவும் விரும்பவில்லை. என்றென்றைக்கும் குன்றாப் புகழுக்குரிய அறிஞரொருவரை அவதூறு செய்து அவ

மானப்படுத்தி, வாய்ப்பூட்டிட்டு, அவருக்குச் சொல்லரிய இன்னல்களையும் விளைத்த பெருமக்கள்—மீண்டும் என்றைக்கும் மீளா வகையில் இறந்துபட்டார்கள். செத்த ஜந்துக்களைச் சிறுமை செய்வது வீரமுமன்று; அது நம் வழக்கமுமன்று.

அவர்களிடத்து அறிஞருக்கு வருத்தமேன்? அறிஞருக்கு அவரிடம் கருணையே!

பிறவியென்ற சிறு தோணியில் ஏறி, அவர் காலப் பெருங்கடலைக் கடக்கவே நினைத்தனர்! ஆனால், தோணியில் அறியாமை ஆணவம் என்னும் இருபெரும்பொத்தல்களும், மூட நம்பிக்கை என்னும் ஒரு கற்பாறையும் இருப்பதறிகிலர்! காலக் கருங்கடலை இன்னார் கடக்கும் நாள் எந்நாள்! கடப்பதுதான் எவ்வாறு!

சுவடும் தெரியாது மறையும் நீரிற் குமிழிகளோடு போரிடுவது ஏன்! அளத்தற்கரிய அறியாமைக்கடலின் ஆழத்தை வாழ்க்கையின் குறுகிய கால அளவிற்குள் அளக்க எண்ணுவதும் ஏன்!

ஆகவே, இனிக் கலீலியோவைப் போன்றவரிடமே நமது நாட்டம் நாடுவதாக! சாகா வரம் பெற்ற அன்னாரின் பேச்சே நமக்கு இனிப்பதாக! அவர் செய்த மாண்புறு செயல்களே நமக்கு நினைப்புமாகுக! இனி நாம் பணிவதும் துதிப்பதும் அறிவுத்தெய்வத்துக்கேயாகுக!

* * *

கலீலியோ நடத்திய ஆராய்ச்சிகளும், அவற்றினின்றும் வெளி வந்த உண்மைகளும் எண்ணிறந்தனவாம்.[1] அவற்றுள் முக்கியமாக உள்ள சிலவற்றையாவது ஒவ்வொருவரும் தெரிந்து தெளிவுற வேண்டும்.

## 1

பதினேழுவயதும் நிரம்பாத கலீலியோவின் அறிவு நுட்பத்திற்குப் பின் வரும் சோதனை சான்ருகும் :

இளைஞர் தேவாலயத்திற்குச் சென்றிருந்த சமயம் அது.

ஆலயத்தின் முகட்டிலிருந்து நீண்ட சங்கிலியொன்று தொங்கிக்கொண்டிருந்தது. சங்கிலியின் நுனியில் ஒரு பித்தளை விளக்கு இணைக்கப்பட்டிருந்தது. காற்றடித்ததால் விளக்கசைந்தது. ஆயினும், அதன் ஆட்டம் உடனே ஓயவில்லை. அது ஊசலைப்போலச் சீராய் ஆட ஆரம்பித்தது.

அதை உற்று நோக்கின இளைஞரின் கண்கள். 'ஆட்டத்தில் புதுமையுண்டு!' என்றறிந்தது அவர் மனம். ஆனல் சீர்மை எதுவாக இருக்கலாம் என்பது அறிவுக்குப் புலனுகவில்லை. மீண்டும் மீண்டும் யோசித்தார் வாலிபர். புதுமை விளங்கவில்லை. உண்மை தோன்றவில்லை. சோதனை இல்லாமல் உண்மை துலங்குவது சாஸ்திர ஆராய்ச்சியில் இல்லை.

**காஞ்சீபுரம் நயினப் பிள்ளையின்** தாளப் பிரமாணம் 'தத்திமி, தகதிமி, தத்திமி, தகதிமி' என்று

1. அனுபந்தம் பார்க்க.

ஒரே சீராயிருக்கும் என்று சொல்லுவார்கள். அதுபோல, விளக்கின் ஆட்டமும் ஒரே காலப் பிரமாணம் அமைந்து, சீராயிருப்பதாய் கலீலியோவுக்குச் சந்தேகம் உதித்தது.

சாஸ்திர ஆராய்ச்சியில், "எனக்கு ஞானம் உதயமாய்விட்டது," என்று சொல்லி நிற்பது வழக்கமன்று; சந்தேகங்கள் தோன்றுவதும், சரியா தவரு என்பதற்குச் சரியான அத்தாட்சிகள் தேடுவதும், சோதனை செய்வதுமே வழக்கம்.

கடிகாரமிருந்திருந்தால், ஆட்டத்தின் கால அளவு சீரானதா, சீர் கெட்டதா என்பதைக் கலீலியோ சோதித்திருக்கலாம். ஆனால், கலீலியோவிடம் அச்சமயம் கடிகாரம் இல்லை. கலீலியோ இறந்த ஒரு நூற்றாண்டுக்குப் பிறகும் உலகத்தில் எங்கும் கடிகாரம் என்பதில்லை.

கடிகாரமில்லாமல் கலீலியோ சோதனை நடத்தியது ஆச்சரியத்திலும் ஆச்சரியமே! ஒரே நிதானத்துடன் துடிக்கும் கைந்நாடியே[1] கலீலியோவுக்குக் கடிகாரமாயிற்று! இத்தனை நாடித் துடிப்பிற்கு ஒரு முறை ஓர் ஆட்டம் என்பது சோதிக்கப்பட்டது. சோதனையும், ஒரு முறை இருமுறையுடன் நில்லாமல், பன்முறையும் நடைபெற்றது. ஆட்டத்தின் கால அளவோ, சிறிதேனும் ஏறுவதும் குறைவதும் இல்லாமல், ஒரேயளவினதாய் இருந்தது. சங்கிலியின் இறுதியில் அமைந்த விளக்கின் ஆட்டம், ஒரே கால அளவைப் பெற்றிருக்கும் என்ற உண்மை

---

1. Pulse

கலீலியோ சோதனையும் ஆராய்ச்சியும் செய்து வெளியிட்டதாகும்.

உண்மையறிய மேற்கூறிய முறையே தற் காலத்தில் கையாளப்படுகிறது. அதற்குச் 'சோதனை முறை' என்பது பெயர். அது காரண மாகவே பௌதிகம், இரசாயனம் முதலிய துறைகளில் புதியன புதியனவாக உண்மைகள் வெளி வந்துகொண்டேயிருக்கின்றன.

நீராவியின் சக்தி, இரயில் வண்டி, புகைக் கப்பல், மின்சார விளக்கு, மோட்டார் வண்டி, ஏரோபிளேன், இரேடியோ, புகைப்படம், சினிமா, கம்பியில்லாத் தந்தி, வகை வகையான நூதன யந்திரங்கள் என்பவையெல்லாம் சோதனை முறையின் குழந்தைகளே என்பது யாவரும் அறியற்பாலது. சோதனை முறை என் னும் கற்பகத் தருவை முதலில் மண்ணிடையே விஞ்ஞான ஆராய்ச்சிச்சாலை ஒவ்வொன்றிலும் நட்டு வளர்த்தவர் கலீலியோவே!

## 2

'எது சரி?' என்னும் கேள்விக்கு உலக வழக்கில் மறுமொழிகள் எத்தனை எத்தனையோ! சாஸ்திர ஆராய்ச்சித் துறையிலோவெனின், கேள்விக்கு மறு மொழி ஒன்றே! விடையளிக் கும் உரிமையும், சோதனை செய்த அறிஞர் களுக்கே தவிர, பிறருக்கில்லை.

கலீலியோ பைசா நகரக் கல்லூரியிலிருக்கும் போது அத்தகைய கேள்வியொன்று பிறந்தது:

'கற்களில் பெரியதொன்றையும், சிறியதொன்றையும் ஒரே இடத்திலிருந்து ஒரே காலத்தில் நழுவ விடுவதாக வைத்துக்கொள்வோம்: அத்தகைய கற்களின் வேகம், வேறுபடுமா, வேறுபடாதா?' என்பது கேள்வி. இதற்கு எத்தனை பேர் எத்தனை விதமான விடையளித்தனர் தெரியுமா?

"பெரிய கல்லுக்கு வேகமதிகந்தான். இதற்கென்ன சந்தேகம்?" என்ருன் ஒரு பேர்வழி.

"அதற்கென்ன ஆட்சேபம்! அரிஸ்டாட்டில்[1] கூட அப்படித்தானே சொல்லியிருக்கிருர்?" என்ருன் மற்ருெரு பேர்வழி.

"இஃது என்ன ஐயா பெரிய கேள்வி! சிறிய கல்லுக்குப் பெரிய கல்லத்தனை வேகம் தோன்றுவது எப்படி?" என்ருன் பின்னுமொரு பேர்வழி.

இப்படிப் பற்பலர் பற்பலவாருக வாய்க்கு வந்தவாறும், மனம் நினைத்தவாறும் பிதற்றிக் கொண்டிருக்கையில், வாய் பேசாதவர் கலீலியோ ஒருவரே!

"**ஆராய்ச்சியில்லாமல் பதிலளிப்பது சரியன்று,**" என்பதை நன்கறிந்த விஞ்ஞானியராதலால், அவர் பெரியதொரு கல்லையும் சிறியதொரு கல்லையும் பொறுக்கி எடுத்துக்கொண்டு பைசா நகரத்தின் சாய்ந்த கோபுரத்தின்[2] உச்சிக்குச் சென்ருர். கலீலியோ சோதனை நடத்தப் போவதைப் பிறர் அறியவே கோபுரத்தின் அடிவாரத்தில் பெருங்கூட்டம் திரண்டது. பேராரவார

---

1. Aristotle  2. Leaning Tower of Pisa

மும் பேதையர்களின் பேரிரைச்சலும் எங்கும் செறிந்து நின்றன.

"எட்டைப் புரட்டினால் தெரியாதா! இதற்குச் சோதனை வேண்டுமோ?" என்ற பிதற்றல் ஒருபுறம்! "பெரியார் சொல்லிவந்ததைச் சரியா தப்பா என்று சோதிப்பதாவது! கலீலியோ சுத்தத் தான்தோன்றி! சோதனையாம் சோதனை! சோதிப்பது பாவமாச்சே! இதற்கு நரகத்தில் தீராத வேதனை உண்டே!" என்ற மதியீனர்களின் உளறல் ஒரு புறம்.

இத்தனை இரைச்சலுக்கிடையே கலீலியோவின் கையிற்பிடித்திருந்த கற்கள், கையினின்றும் நீங்கின. உடனே சந்தடியும் அடங்கிற்று. என்ன ஆச்சரியம்! அக்கூட்டத்திலிருந்த அத்தனை பேர்களும் நினைத்ததற்கு மாறாய், இரண்டு கற்களும் சம காலத்திலேயே பூமியை அடைந்தன!

'கற்களினது வேகம், உருவத்திற் சிறிது பெரிது என்பதனால் வேறுபடாது,' என்னும் உண்மையைக் கலீலியோ சோதித்துத் தெரிந்து கொண்டார். ஏனையரோவெனில், கர்னபரம்பரையிலிருந்து சிலரும், ஏட்டுச்சுவடிகளிலிருந்து சிலரும், சோதனை தேவை இல்லாமலே தெரிந்து கொண்டவராவர்!

உண்மை அறிவிற்கு வழி சோதனையா, அல்லது மூட நம்பிக்கையா என்பதைச் சற்று யோசித்துப் பாருங்கள்! யோசித்தால், கலீலியோவுக்கு இத்தனை பெருமை ஏன் என்பது ஒருவாறு விளங்கும்.

## 3

பூமி சூரியனைச்சுற்றுகிறது என்பதை அறியாத பள்ளிப்பிள்ளையும் இந்நாளில் இல்லை. ஆனால், இவ்வுண்மை கலீலியோவின் நாளில் பலரறிந்ததாயில்லை. இதை வெளியில் சொல்லுவதும் ஆபத்தாகவேயிருந்தது. கணிதத்தில் தேர்ச்சியும் ஆதாரங்களைச் சீர்தூக்கிப் பார்த்து உண்மையறியும் ஆற்றலும் வாய்ந்த இரண்டொருவருக்கே அந்நாளில் பூமி சூரியனைச் சுற்றுவது தெரிந்தது. மற்றவரின் நினைப்பிலோ, சூரியனே பூமியைத் தினந்தோறும் சுற்றிக்கொண்டிருந்தது!

பூமி சூரியனைச்சுற்றும் உண்மையை முதலில் ஊகித்தறிந்து ஸ்தாபித்தவர் கோப்பர்நிக்கஸ்[1] என்பவர். அவர் அறிந்ததான உண்மையைத் தாமும் அறிந்து ஆமோதிப்பதாக உள்ள கடிதமொன்றைக் கலீலியோ கெப்ளர் என்பவருக்கு எழுதியுள்ளார்.[2] அது கலீலியோவின் நிரம்பிய அறிவிற்குத் தக்க சான்றாகும்.

---

1. Copernicus

2. In a letter written to **Kepler** in 1597, **Galileo** says: "Many years ago, I became a convert to the opinion of Copernicus and by that theory, have succeeded in fully explaining many phenomena, which on the contrary hypothesis (Geocentric hypothesis) are altogether inexplicable. I have drawn up many arguments and computations of the opposite opinions which, however, I have not hitherto dared to publish, fearful of meeting the same fate as our master **Copernicus**, who, although he earned for himself immortal fame amongst a few, yet amongst the greater number, appears as only worthy of hooting and derision; so great is the number of fools!"

## 4

வானத்திற் புள்ளி புள்ளியாய்த் தோன்றும் கோடிக்கணக்கான நட்சத்திரங்களையும் கிரகங்களையும் நீங்கள் கண்டிருப்பீர்கள். உண்மையில் அவைகள் புள்ளிகளே அல்ல. அவைகளுட் சில, சூரியனைப்போல் இலட்சம் மடங்கு பெரியவை. மற்றும் சில, சூரியனைக்காட்டிலும் வெப்பத்திலும் ஒளி வீச்சிலும் மிக்கவை. சிலவற்றின் உஷ்ண நிலையோ, நினைவுக்கும் எட்டாததாய் இருக்கும்.

வானத்தினிடையே காணும் கோடிக்கணக்கான கோள்கள் ஒவ்வொன்றின் எடை, பருமன், சுற்றளவு, அமைப்பு, உஷ்ண நிலை, பூமியிலிருந்து உள்ள தூரம் முதலிய பண்புகளை ஆராய்வதே வான நூலின் தொழிலாகும். இத்தொழிலுக்கு முக்கியமாக வேண்டப்படும் கருவியே தூரதிருஷ்டிக் கண்ணாடியாம். இப்படியும் ஒரு கருவி இருக்க முடியும் என்று பிறர் கனவிலும் நினைத்திராத நாளில், அதை முதன்முதலில் அமைத்துக் காட்டிய பெருமை, வான நூலுள்ள மட்டும் கலீலியோவுக்குப் பெருமையாம்.

* * *

**ஆண்டு : 1566] [இடம் : பைசா நகரம்**

**(காலம் : சந்திரிகையுடன் கூடிய இரவு)**

மேலே கூறி வந்த அத்தனை பெருமைக்கும் உரியவராய கலீலியோ, இச்சமயம் இரண்டு வயதும் நிரம்பாத பாலகர்!

"என் கண்ணே, கலீலியோ!" என்று மகவை வாரியணைத்து உச்சி மோந்து மேனி புளக முறத் தழுவித் தாலாட்டும் இம்மாது, அவர் தாய்! "என் சின்னஞ்சிறு கிளியே! செல்வக் களஞ்சியமே! ஆசை மரகதமே!" என்று ஏது வெதுவோ கூறிப் பிள்ளையோடு கொஞ்சிக் குல வும் இவ்வம்மையே, அறிவின் சுரப்பாய கலீலி யோவுக்கு அம்மை!

தம் பல்லில்லா வாய் திறந்து "மம்மமம்மம்" என்று மழலை மிழற்றி எச்சிற் பெருக்கும் இச்சிறு மதலையே பின்னாளில் கலீலியோ!

உலகத்து வானசாஸ்திரிகளில் முதல்வரான கலீலியோ, இச்சமயம், "அம்புலிமானே வாவா!" என்று தாய் அழைக்க அது வாராமை கண்டு, தம் சிறு கரம் நீட்டி அம்புலியை எட்ட முயல் வதும், அது நடைபெறாதுபோகவே முகம் சிவந்து மனம் நைந்தழுவதுமே—புதுமையிலும் புதுமை! பழமையிலும் திகழும் பெரியதொரு புதுமை!



# 2

# சார்லஸ் இராபர்ட்டு டார்வின்[1]

*[உயிரினங்களுள் ஒன்றுக்கும் மற்ருென்றுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை நெடுங்காலம்வரை அறியப்படவில்லை. அது அறியப்பட்ட பின்பும் இனத்துக்கும் இனத்துக்கும் உள்ள தொடர்பு அறியப்படாத நிலையில் இருந்தது. இத்தொடர்பு யாது என்பதைத் தகுந்த அத்தாட்சிகளுடன் ஊகித்தறிந்து, நிலைநாட்டிய பெருமை டார்வினதாம்.]*

உலக நடவடிக்கைக்கும் விஞ்ஞானத்தின் மனப்பாங்குக்கும்[2] பெருத்த ஒரு வித்தியாசம் உண்டு. 'கற்றது கைம்மண்ணளவு; கல்லாதது உலகளவு,' என்பது பேச்சளவில் உண்மையாவதே தவிர, அறிவில் தைத்து, நினைவில் ஊறுவதாயும், நெஞ்சினை உறுத்துவதாயும், நாவினை அடக்குவதாயும் இல்லை. அனைத்தையும் கற்றவராகத் தம்மைக் கருதுபவரே பெரும்பான்மையர். தாம் நினைப்பதுதான் சரி என்று சாதிக்க முயல்பவரே பலர். பேசுவது தாறுமாருய் இருப்பினும், பேசுவதைக் கெட்டியாகப் பேசி, 'முயலுக்கு மூன்றே கால்!' என்று வாது செய்வதையே சமத்காரம் என்று நம்பி, கல்லாத ஆகுலச் சொல்லுக்குத் தலையாட்டுவதே எங்கும் காணும் உலக வழக்காவது.

விஞ்ஞானத்தின் மனப்பாங்கோ, இதற்கு முற்றிலும் மாருும். விஞ்ஞானத் துறையில், முற்

1. Charles Robert Darwin 2. Scientific outlook

றிலும் அறிந்தவனாய எவனும் இல்லை. "கடற்கரையிலுள்ள எண்ணிறந்த கற்களில், எவையோ இரண்டொன்றைப் பொறுக்கினேன்," என்று நியூட்டன் கூறியது, அறிவாளியின் அடக்கம் மட்டுமன்று; **அதுவே உண்மையுமாம்.** அறிய வேண்டுவன அனைத்தையும் அறிய, ஆயிரம் பிறவியும் போதா. ஆகவே, முற்றிலும் அறியப்பட்டதாய உண்மையும் இல்லை. உண்மைகளின் ஒவ்வொரு பகுதி, ஆங்காங்குச் சிறுகச்சிறுக வெளிவந்து, 'பல துளி பெருவெள்ளம்,' என்ற முறையில் பெருகியுள்ளனவே தவிர, ஒருவனே அனைத்தையும் கற்ருன் என்பது இல்லை; ஏனெனில், அது முடியவும் முடியாது. 'நான் அறியாதது எது?' என்பவனுக்கும், 'எனது முடிவை எதிர்ப்பவர் யார்?' என்று போருக்கழைப்பவனுக்கும் விஞ்ஞானத்துறையில் உண்மையில் வேலையே இல்லை.

"தீர விளங்கப் பல நாள் ஆலோசித்துச் செய்த முடிவுகளையும், தவறென்று தெரிந்தவுடன் **அக்கணமே மறந்துவிட்டிருக்கிறேன்,"** என்று கூறுவது டார்வினைப்போன்ற அறிஞர்களின் கூற்றே. "இயற்கை நங்கையின் எழில் கண்டு காமுற்றேன்; எவையோ இரண்டொரு நூதனங்கண்டேன்.......தத்துவ விளக்கத்தில் எனக்கு உற்றுழி உதவியவை எவை எனில், குன்ருத ஆர்வமும், குறையாத மனவெழுச்சியும், ஓயா உழைப்பும், தளரா ஊக்கமும், **முடிவுக்கு வருவதில் பரம நிதான புத்தியுமேயாம்,"** என்று

சொல்லும் பெருமை, டார்வின் போன்ற ஆன்று அவிந்தடங்கிய சாஸ்திர விற்பன்னர்களுக்கே கைகூடுவதாகும்.

* * *

கலீலியோவைப் போல வறுமை, சிறுமை, பிறர் தீமை என்னும் இவைகளின் வாதனை யையும் கொடுமையையும் டார்வின் அறிந்த வரேயல்லர்.

டார்வின் பிறந்த குடும்பத்திலும், அவர்தம் வாழ்நாளிலும், இன்மைப்பிணி, இல்லாததே யாகும். டார்வினின் இளமையைப்பற்றியும், அவர் கல்விகற்றதைப் பற்றியும் குறிப்பதற்கான விஷயங்கள் மிகச் சிலவே. டார்வின் முதலில் எண்ணும் எழுத்தும் கற்றது ஷ்ரூஸ்பரி[1] என்னு மிடத்திலாம். அதன் பிறகு அவர் படிப்படியாய் ஏறி, வயது பதினாறானதும், எடின்பரோக்[2] கல்லூ ரிக்கு வைத்தியம் பயிலுவதற்கென்று அனுப்பப் பட்டார். அப்படிப்பில் அவருக்குப் பற்றுதலில்லா மற் போகவே இரண்டு மூன்று வருஷங்களுக்குப் பின், அர்ச்சகத்தொழிலில் அமர்த்தப்படும் நோக் கத்துடன் அவர் கேம்பிரிட்ஜ்[3] சர்வகலாசாலைக்கு அனுப்பப்பட்டார். அங்கு மூன்று வருஷங்களைக் கழித்த பின் டார்வின் பத்தாமவராகத் தேறிச் சாதாரணமான ஒரு பட்டம் பெற்று வெளிக் கிளம்பினார்.

எனவே ஆண்டு 1831வரை டார்வின் வாழ்க் கையில் குறிப்பதற்கானவை, மேற்கூறியவையே.

---

1. Shrewsbury 2. Edinburgh 3. Cambridge

அதன் பிறகே அவர் அறிவு விகஸிக்க ஆரம்பித்தது. மலரின் மணமும் நாற்புறமும் பரவிச் சூழ்ந்தது அவ்வாண்டுக்குப் பிறகுதான்.

மேற்கூறிய ஆண்டில் தரைநூல் சம்பந்தமான சில ஆராய்ச்சிகளை[1] நடத்தும் எண்ணத்துடன் இங்கிலாந்திலிருந்து சிலர் பீகில்[2] என்ற கப்பலில் பிரயாணமாயினர். ஆங்காங்குள்ள புழுக்கள், பூச்சிகள், பட்சிகள், பாம்புகள், மீன்கள், விலங்குகள், குரங்குகள், மனிதர்கள் முதலிய ஜீவ ராசிகளின் ஒற்றுமை வேற்றுமைகளை அறிவதற்கென்று டார்வினும் அக்கப்பலிலேயே புறப்பட்டார்.

கப்பலும் சுமார் ஐந்து வருஷகாலம் பல இடங்களுக்கும் சென்றது. அட்லாண்டிக்கு மகாசமுத்திரத்திலுள்ள பல தீவுகள், தென் அமெரிக்காவின் கரையோரங்களில் உள்ள தீவுகள், நியூஸீலந்து, ஆஸ்திரேலியா முதலிய பற்பல இடங்களையும் சுற்றிக்கொண்டு கடைசியாக 1836-ஆம் ஆண்டில் கப்பல் மீண்டும் இங்கிலாந்து வந்து சேர்ந்தது.

ஐந்தாண்டுகள் இயற்கைப்படிப்புப் படித்துத் திரும்பிய டார்வினின் மனப்பண்பை என்னென்று விவரிப்பது! பாலினுள் மறைவாய்த் தங்கியிருந்த வெண்ணெய், பாலை ஒருவன் காய்ச்சித் தயிராக்கி மத்தினால் கடையும் போது தனிப்பட்டு வெளியாகி உருண்டு திரண்டு

1. Geographical Survey 2. *Beagle*



உருப்பெறுவதைப் போல, டார்வினின் அறிவு இவ்வியற்கைப் படிப்பினால் வளர்ந்து, செறிந்து, முதிர்ச்சி பெற்றதென்னலாம்.

1836-ஆம் ஆண்டுக்குப் பிறகு உள்ள டார்வினின் வாழ்நாளை மிகச் சுருக்கமாக விவரித்து விடலாம். அவ்வாழ்க்கையின் நீடிப்பு 46 ஆண்டுகளாம். அவ்வாண்டுகளுள் ஒவ்வொன்றிலும் டார்வின் உழைத்த நாட்கள் 365! ஒவ்வொரு நாளிலுமோ, குறைந்தது 15 மணி நேரமாவது சிந்தனை அல்லது ஆராய்ச்சி, அதுவும் இல்லாவிட்டால் ஆராய்ச்சியுரைகள் எழுதுதல்!

அவர் எம்மா வெட்ஜ்வுட்டு[1] என்ற உத்தமப் பெண்மணியைக் காதலித்து மணந்ததும், அவருக்குப் பிள்ளைகளும் பெண்களும் பிறந்ததும், போஜன சாலையிலும் சயன அறையிலும் சிற்சில சமயம் அவர் காணப்பட்டதும் தற்செயலாக நேர்ந்த சம்பவங்களேயாம். அவர் அறிந்து செய்ததாகச் சொல்லக் கூடியது யாதெனில், அறிவின் வளர்ச்சி ஒன்றேயாம்!

* * *

கலீலியோவைவிட டார்வினைப் பல விதங்களிலும் அதிர்ஷ்டசாலி என்றே சொல்ல வேண்டும். மூடநம்பிக்கைக்கும் அசட்டுக் கொள்கைகளுக்கும் செல்லரித்த பழைய அபிப்பிராயங்களுக்கும் அவர் கருத்துக்கள் எவ்வளவோ எதிர்ப்பானவையாயிருந்தும், அவைகளை உலகம் எளிதில் ஏற்றுவிட்டது. கலீலியோவுக்கு நேர்ந்த எதிர்ப்

1. Emma Wedgwood

பும் மனக்கொதிப்பும் சலிப்பும் மனக்கசப்பும் டார்வினுக்கு நேரவே இல்லை.

இதற்கு முக்கிய காரணமாய் இருந்தது 19-ஆம் நூற்றுண்டில் திடீரென்று ஏற்பட்ட அறிவின் வளர்ச்சியேயாம். அதுவரையிற் பாறையாய் உறைந்திருந்த ஆறுகளும் ஏரிகளும் ஞானச் சுடரின் வெப்பம் பெற்று உருகி, அள்ளிப் பருக வல்ல நீர்ப்பெருக்குகளாய் மாறின என்பது முற்றிலும் சரியே.

சிறிது சிறிதாக அறியாமையின் எல்லைகள் குறுகின. உலகமும் சிறிது சிறிதாக அறிவின் ஒளி பெற்றது. உதாரணமாக, ஜீவ ராசிகள் இனம் இனமாய்ப் பிரிகின்றன என்றும், ஒரே இனத்தைச் சேர்ந்த உயிர்களுள் பெருத்த வேறுபாடுகள் இல்லை என்றும், ஓர் இனத்திற்கும் மற்ருேர் இனத்திற்குமுள்ள வேறுபாடுகளே இத்தகையன என்றும் ஜீவ நூல் கூறும் உண்மைகளை உலகம் 19-ஆம் நூற்றுண்டு பிறப்பதற்கு முன்னமே ஏற்றிருந்தது.

மேற்குறித்த உண்மைகளைச் சற்று விளக்குவது அவசியமாகிறது: ஒரே இனத்தைச் சேர்ந்த ஜீவ ராசிகளில் அதிக வித்தியாசங்கள் இல்லை என்பதற்குப் போதிய ஆதாரங்களிருக்கின்றன. காட்டு மனிதர்களை உதாரணமாக வைத்துப் பேசுவோமாணுல், அவர்களின் எலும்புக் கூட்டமைப்பிலோ, கை, கால், விரல் முதலிய அவயவங்களின் எண்ணிக்கையிலோ எள்ளளவு வித்தியாசமும் காண்பதற்கில்லை. முக்கியமான அவய

வங்களின் அமைப்பில் பெரு வேறுபாடுகள் இல்லை என்பது அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதேயாம். உடல் நிறம், முகச் சாயை, உயரம், பருமன் என்பன போன்ற சிறிய பண்புகளில் உள்ள வித்தியாசம் பெரிதென்று கருதப்படுவதில்லை.

இதற்கு மாருகவுள்ளவையே ஓர் இனத்திற்கும் மற்ருேர் இனத்திற்குமுள்ள வேறுபாடுகளாவன. உதாரணமாக, சாரைப்பாம்பு என்ற உயிரினத்திற்கும் காட்டு மனிதன் என்ற உயிரினத்திற்கும் எத்தனை பெரு வேறுபாடுகள் உள்ளன! இவை அனைவரும் அறிந்தனவே. ஆனால், காட்டுமனிதர்களையும் ஒருவகைக் குரங்குக் கூட்டத்தையும் ஒப்பிடும்போது, அத்தனை பெரு வித்தியாசங்கள் காண்பதில்லை. உடலமைப்பிலும், மற்றுமுள்ள பண்புகளிலும் பற்பல ஒற்றுமைகளும் சிற்சில வேற்றுமைகளுமே காணப்படுகின்றன. அதுபற்றியே அந்த இரண்டு இனங்களும் ஜீவ ராசிகளின் இனத் தொகுதியில் ஒன்றை ஒன்று அடுத்தடுத்துள்ள இனமாக வைத்து எண்ணப்படுகின்றன.

மேற்கூறிய கருத்தைப் பின் வரும் உதாரணம் நன்கு விளக்கும்: ஒரு பெரிய நகரில் உள்ள கட்டடங்களைக் கவனிப்போம்: அவற்றுள் ஒவ்வொன்றும் தனிப்பட்டதே; எனினும், ஊருக்கு வெளிப்புறத்திலுள்ள பங்களாக்களெல்லாம் ஓரினம். குடிசைகள் மற்ருேரினம். நகரத்தின் நடுவே எண்ணிறந்த சந்துகளில் உள்ள விடுதிகள்

வேருேர் இனம். பெரிய வீதிகளில் உள்ள வீடுகள் பின்னுமோரினம்.

ஒரே இனத்திற்குள் அதிக மாறுபாடுகள் இல்லாததுபோல, குடிசைகளுக்குள் அதிக வித்தியாசமிருப்பதில்லை. காற்ருேட்டம், சுற்றிலும் கண்ணுக்கு இனிய தோட்டம், எப்போதும் களியாட்டம் என்னும் முக்கியமான பண்புகளில் பங்களாக்களுள் அதிக வேற்றுமை இல்லை. ஆனல், இனத்திற்கு இனம் வேறுபாடு உண்டு. சந்திலுள்ள விடுதிகளில் காற்ருேட்டமே இல்லை! நகர் நடுவே அமைந்த வீதிகளின் வீடுகளிலோ, **படங்களிலேதான் தோட்டம்!**

அடுத்தடுத்துள்ள இனங்களாவன யாவை? சிறு ஓலைக் குடிசை, மண் குடிசை, பனைச்சட்டத்துடன் அமைந்த சிறு வீடு, ஓட்டுக் கட்டடம், சிறு மச்சு வீடு, பெரிய மச்சு வீடு, பெருத்த பங்களா என்பவைகளுள் ஒவ்வொன்றும் அதற்கடுத்துள்ளதற்கு இனமாகும்.

மேற்கூறிய அத்தனை உண்மைகளையும் அறிந்து, போதிய ஆதாரங்களைச் சேகரித்துப் பல காலும் பரிசீலனை செய்துதான் லமார்க்கு[1] என்னும் ஜீவ நூலாராய்ச்சியாளர்,[2] பரிணும இயக்கம்[3] என்ற கொள்கையைக் கற்பித்தார். பரிணும இயக்கத்திற்கு ஆதாரமான உண்மைகளை ஏற்ற உலகம் (1809-ஆம் ஆண்டு) பரிணும வாதத்தை எதிர்த்தது ஆச்சரியத்தையே விளக்கிறது.

---

1. Lamarck 2. Biologist 3. Evolution

உலகம் ஏற்பதற்குத் தயங்கிய பரிணும இயக்கமாவது யாது? இதை விளக்குவோம்: ஜீவ ராசிகளின் இனம் பல என்று சொன்னேமல்லவா? அந்த இனங்களுள் ஒவ்வொன்றும் தனக்கு அடுத்துள்ள மற்ருேர் இனத்திலிருந்து பேதித்து வந்தது என்பதே பரிணும இயக்கத்தின் முக்கிய கருத்தாகும்.

ஒன்றிலிருந்து மற்ருென்று, இனத்திலிருந்து அடுத்த இனம், அதிலிருந்து அடுத்த இனம் என்னும் கொள்கை எவ்வளவு எளிதானது! ஆனல், உலகம் ஏன் இதை எதிர்த்தது என்பீர்கள்! இதற்குக் காரணமில்லாமலில்லை. பரிணும வாதம் சரியாவதானல், மனிதனின் தோற்றம் குரங்குக் கூட்டத்திலே என்பதாகிவிடும்! குரங்குகளை மூதாதையர்களென்று சொன்னல் பிரபுக்களுக்கும் சீமாட்டிகளுக்கும் கோபம் வராதா என்ன? கோபம் வந்தது! மூக்கிற்கு மேலும் சிலருக்குக் கோபம் பிறந்தது!

பரிணும இயக்கத்தை மூட உலகம் ஏற்கவில்லை என்பதை லமார்க்குப் பொருட்படுத்தவில்லை. அறிஞருள்ளும் சிலர் அதற்கு ஆட்சேபனை செய்ததே அவருக்குத் துக்கத்தை விளைத்தது. அறிஞர்கள் ஆட்சேபிக்கவும் போதிய காரணங்களிருந்தன. பரிணும இயக்கத்தைச் சரி என்று ரூபிப்பதற்காக லமார்க்கு எடுத்துக் காட்டிய சான்றுகளும் மேற்கோள்களும் சப்பையாயும் மூளியாயும் இருந்தன.

ஆகவே, பரிணாம வாதம் உண்மையாயிருந்தும் அது லமார்க்கின் நாளில் அறிஞர்களாலும் ஒப்புக்கொள்ளத்தகாத நிலையில் இருந்தது. அக்காலத்து ஜீவ நூலாராய்ச்சியாளர், வியாதி எது என்று தெரிந்தும் அதற்கு மருந்து எது என்று தெரியாத நிலையில் அவதிப்பட்டுக் கொண்டிருந்தனர்! அறியாமைப் பிணியறுக்கும் சஞ்சீவியைக் கொண்டு வந்த மெய்ஞ்ஞான பண்டிதர் டார்வினேயாவர். டார்வினுக்குப் பிறகு பரிணாம இயக்கத்தைச் சரியன்று என்று எதிர்ப்பவர் அறிஞருள் எவருமில்லை என்னலாம்.

அதுவரையில் உலகம் தீவிரமாய் எதிர்த்து வந்த கொள்கையை அதுவே முற்றிலும் சரியானது என்று அனைவர் மனத்திலும் படும்படி செய்து, அதைச் சிறிதுசிறிதாக அறிவில் ஊறவும் செய்த டார்வினின் சாகஸச் செயல் போன்ற வேறொரு செயல் சரித்திரத்திலேயே இல்லை; பேச்சு வழக்கிலுங்கூட இல்லை.

* * *

மந்திரத்தினால் மாங்காய் விழுந்ததென்று கருத வேண்டா. ஏதோ சிறிது நேரம் கண்ணை மூடிக்கொண்டு மூக்கையும் பிடித்துக்கொண்டு, தலையை இரண்டொரு முறை அசைத்தவுடன் டார்வினுக்கு ஞானோதயம் ஆயிற்று என்று கருத வேண்டா. சுமார் 8000 நாட்கள் அல்லும் பகலும் ஓயாது உழைத்து, ஆயிரக்கணக்கில் ருசுக்களையும் அத்தாட்சிகளையும் சேகரித்துச் சோதித்துச் சீர்தூக்கிப் பலகாலும் பரிசீலனை

செய்த பின்னர்த்தான், 22 வருஷங்களுக்குப் பின் ஒரு நாள், டார்வின் பரிணும இயக்கத்திற்குத் தக்க ஆதாரங் கண்டார்!

ஆரம்பத்தில் அனைத்திலும் ஒத்திருந்த ஜீவ ராசிகளை இனம் இனமாகப் பிரிக்கச் செய்ததும், இனத்திற்கு இனம் பெரு வேறுபாடுகளை விளைவித்ததும், ஒரே இனத்திலுள்ள சிறு சிறு வேற்றுமைகளுக்கும் காரணமாக உள்ளதும் எது தெரியுமா?[1] **வாழ்க்கைப் போராட்டந்தான். உணவின்பொருட்டும் சுகத்தின்பொருட்டும் ஏற்படும் போட்டா போட்டிதான்.**[2]

இப்போட்டி கடும்போட்டி! இது ஓயாப் போட்டி! இது காரணமாகவே உயிர்கள் ஒன்றி லிருந்து ஒன்று பரிணமித்தும், பெரு வேறுபாடு களுடன் தனித்தனி இனங்களாய்ப் பிரிகின்றன.

வாழ்க்கைப் போராட்டம் இன்றேல், சில மனிதர்களுக்கு இன்னமும் வால் மறைந்திராது! சில குரங்குகள், பயிரிடக் கற்றுக்கொண்டிருக் கும்! சில காட்டு மனிதர்கள் நாகரிகத்திலும் கூட்டவாழ்விலும் மிகவும் மேலோங்கியிருப்பார் கள்!

போட்டாபோட்டியே ஒரே வர்க்கத்தைச் சேர்ந்தவர்களுள் ஏற்றத்தாழ்வுகளைக் கற்பித்து விடுகிறது. **போட்டா போட்டி இன்றேல், அனைவரும் ஒன்றே.**

ஜீவ ராசிகள் தத்தம் கர்மாவுக்கு ஏற்ற வாறு விலங்குகளாகவோ புழுக்களாகவோ

---

1. Natural Selection 2. Struggle for existence

தனித்தனியாய்ப் படைக்கப்படுகின்றன என்ற நம்பிக்கைகளை அறவே மாற்றி, 'பரிணும இயக்கமே ஜீவ ரகஸியம்,' என்பதை முதன்முதலில் நிலை நாட்டியவர் டார்வினேயாவர்.

* * *

தற்காலத்தில் பரிணும இயக்கத்தை எதிர்ப்பவனுக்கு அறிஞன் என்னும் பெயரில்லை. எனினும், டார்வின் செய்த முடிவுகள் அத்தனை முடிவானவையல்ல என்று கருதப்படுகின்றன. இதனுல், டார்வின் புகழ் குன்றிவிடலாம் என்ற நினைப்பும் வேண்டா. அவர் புகழ், குன்ருப் புகழாம்.

'வீடு கட்ட என்ன தேவை?' என்றபோது அறிஞரனைவரும் விடை தெரியாது வாளாவிருந்தனர். 'செங்கல்லும் சுண்ணும்பும் தேவை,' என்ற அறிஞரே டார்வின்.

தற்காலத்திலுள்ள அறிஞர்கள், "வீடு கட்டுவதாஞல் மரம் வேண்டாவோ? இருப்புக்கம்பிகளும் தேவை," என்று வீடமைக்க மற்றும் வேண்டப்படுவனவற்றைக் குறிக்கிருர்கள். எனினும், செங்கல்லும் சுண்ணும்பும் இல்லாமல் வீடமைவது எவ்வாறு?

அது போல, பரிணும இயக்கத்துக்கும், இனப்பிரிவுக்கும், டார்வின் உள்ளனவாக எடுத்துக்காட்டிய ஆதாரங்களுடன் வேறு சில ஆதாரங்களும் அதற்குப்பின் கிடைத்திருக்கின்றன. இவை, அறிவின் வளர்ச்சிக்குச் சான்ருமே தவிர, டார்வினின் அறிவுக்கு இழுக்காவது எங்ஙனம்?

என்றும் அழியாப்புகழுக்கு டார்வின் உரியரா வது இனவேறுபாடுகளைச் செய்வதாக அவர் கற் பித்த காரணங்களுக்காக அல்ல; **பரிணாம இயக் கத்தை உலகம் ஏற்குமாறு செய்ததற்காகவேயாம்.** அவர் செய்த ஏனைய முடிவுகளும், கண்டுபிடித்த உண்மைகளும் அல்லவென்றாயினும், அவர் புகழ் குன்றுவது, ஊழிக்காலத்திலேதான்!

விஞ்ஞானத்தின் போக்கை அறியாதவர்க ளுக்கு இது பேராச்சரியத்தையே விளைக்கும். டார்வினின் ஆராய்ச்சிகளில் சில சரியல்ல என் பது பின்னாளில் துலங்கிற்று என்று நாம் சொல் லும்போது, அன்னார் உலக வழக்கின்படி டார் வினைத் தோற்றவராகவே எண்ணிவிடலாம். அப் படி எண்ணுவது தவறாகும். அஃது அறிவுக்கு எல்லைவைப்பதாகும்; ஆராய்ச்சிக்கு முற்றுப் புள்ளி இடுவதாகும். அது 'தோற்றவரும்வென் றவரும் விஞ்ஞானத்துறையில் இல்லை,' என்பதை அறியாததுமாகும்.

**ஏனெனில், ஒவ்வொரு வெற்றியும் கால அள வில் தோல்வியே.** ஒவ்வொரு முடிவும், சிறிது காலத்திற்குப்பின் அறிவின் விரிவினால் அத்தனை முடிவானதன்றாகிவிடும். இந்த முறையில் நியூட்டனும் தோற்றவரேயாவர். சமீப நாளில் அவர் அயின்ஸ்டைனிடம் தோற்றுவிட்டார்! அயின்ஸ்டைனும் ஒருநாள் எவரிடமோ தோற்பது நிச்சயம்! விஞ்ஞானத்துறையில் நடக் கும் போர்கள் இத்தன்மையனவேயாம்! இங்குத் தோல்வியும் வெற்றி! வெற்றியெல்லாம் ஒருநாள்

தோல்வியே! இங்கு தோற்றவருக்கும் பெருமை! வென்றவருக்கும் பெருமை! இருவரும் முற்றிலும் சமமானவரே!

மற்ருென்று: உலக வழக்கிற்கு முற்றிலும் மாருக, விஞ்ஞானத்துறையில், முறைக்குள்ள பெருமை முடிவுக்கு இல்லை. அழியாப் புகழுக் குரித்தாவது, முறையின் உயர்வுதான். முடிவுகளோ எனில், அவ்வப்போது மாறிக்கொண்டே இருக்கும். சோதனை மூலம் வெளித் தோன்றும் ஆதாரங்களுக்கு ஏற்ப முடிவுகளும் கொள்கைக ளும் தேரப்படும்.

தேர்ந்தது தவறு என்று ஆதாரம் கிடைத்தவு டன், முன் தேர்ந்த முடிபும் மாற்றப்படும். ஆதா ரங்களும், அத்தாட்சிகளும், ருசுக்களும் முக்கியமே தவிர, இங்கு முடிவுகளுக்கு முக்கியத்துவம் இல்லை. பழையன கழிவதிலும், அதுவரை நினைத்துமிராத புதியன புகுவதிலும் எந்த விஞ் ஞானிக்கும் துக்கமில்லை. உண்மை யாது என்பதில் நாட்டமே தவிர், காலக் கழிவினுல் புதியது பழை யது என்ருய முடிவு அவனுக்கு ஒரு பொருட்டே அன்று.

இம்மனப் பான்மையே அறிவின் வளர்ச்சிக்கு அடிப்படையாம். இதுவே விஞ்ஞான சாஸ்திரிகள் எங்கெங்கோ புதைந்து கிடக்கும் உண்மைகளைக் கிளறி அறிவதற்குதவும் ஆயுதமுமாகும்.

உலக வழக்கத்திற்கு மாருக, பெரியவர் சிறிய வர் என்ற வேற்றுமை சிறிதுமின்றி அறிஞர் பலர் ஒருவர் பின் ஒருவராய் நின்று, ஏகோபித்துப்

பேருண்மைகளைத் துலக்குவது பொலிவும் சீர்மையும் பொருந்திய காட்சியாகும். தம்மால் நீந்திக் கடக்க இயலாத ஓடையொன்று எதிர்ப்பட்ட போது குரங்குகள் பாலமாக அமைந்து, இக்கரையிலிருந்து அக்கரை சேர்வதையே அறிஞருள் உள்ள ஒற்றுமைக்கும் உண்மை துலக்கும் முறைக்கும் தக்க உதாரணமாகச் சொல்லலாம்.

குரங்குப் பாலம் அமையும் விதம் பலர் அறிந்ததே. அஃது அறியாதவரும் அறியத் தக்கதேயாம். கூட்டத்தில் வலிய குரங்கொன்று முதலில் கரையோரத்திலுள்ள கிளையொன்றைக் கெட்டியாகப் பற்றிக்கொள்ளும். அதைப்பிடித்ததாய் அதன் பின் ஒன்று; அதைப்பிடித்ததாய் அதன் பின் ஒன்று; அதன்பின் ஒன்று; ஒன்றன் பின் ஒன்று என்று பாலம் தொடரும். ஓடையைக் கடக்கப் போதிய நீளம் அமைந்தவுடன், குரங்குச் சங்கிலியின் இறுதியில் அமைந்த வலிய குரங்கொன்று ஆடியாடித் தாவித்தாவி, அக்கரையிலுள்ள மரக்கிளையை எட்டிப் பிடித்து விடும். பாலமும் இக்கரையிலிருந்து அக்கரை வரை சீராய் அமையும். அப்பாலத்தினூடாகவே குட்டிக் குரங்குகளும் மற்றக்குரங்குகளும் இக்கரையிலிருந்து அக்கரை அடையும்.

இவ்விதமாகவே, அறியாமை என்ற ஓடையை விஞ்ஞானிகள் கடக்கின்றார்கள் என்பது யாவரும் அறியற்பாலது. டார்வின், கலீலியோ, நியூட்டன் போன்றவர்களே, குரங்குப் பாலத்திற்கு முதலிலும் முடிவிலும் வேண்டப்படுபவர்

கள். ஆராய்ச்சிக்கு முதலிலும் முடிவிலும் வேண் டப்படும் கருத்துக்களைக் கொடுப்பவர்களும் அவர்களே. பிறகு ஒருவர் பின் ஒருவர், கருத்துக் குப்பின் கருத்து, ஒரு கருத்திலிருந்து அக்கருத் தை ஒத்ததும் அதினின்று சிறிது வேறுபட்டது மான மற்றொரு கருத்து என்ற விதமாகக் குரங் குப் பாலம் அமைகிறது. எத்தனையோ குரங்குப் பாலங்கள் சேர்ந்ததே விஞ்ஞான அறிவுத் திரளாகும்.

ஓடையைக் கடக்கவே பாலம்; அதைக் கடந்தபின், பாலம் வேண்டப்படுவது அன்று; அடுத்த ஓடையைக் கடப்பதில் அறிவு செல் லுமே தவிர, கடந்த ஒன்றினைப்பற்றி விஞ் ஞானிகள் வீண் விவாதங்கள் செய்துகொண்டி ரார்கள். மேற்சொன்ன உதாரணத்தில் டார்வின், நியூட்டன், அயின்ஸ்டீன் போன்றவர்கள் எப் படியும் ஆராய்ச்சியின் அக்கரை சேர்ந்துவிடுகின் றார்கள் என்பதும், என்றும் இறவாமல் சிரஞ்சீவி களாய் விளங்குகின்றார்கள் என்பதும் மறக்கக் கூடியவை அல்ல.

* * *

இது டார்வினின் ஆராய்ச்சிகளை விளக்க வந்த நூலன்று.* ஆகவே, எஞ்சிய சில பக்கங் கள், டார்வினின் குணாதிசயங்களுக்கே உரியன.

---

* டார்வினைப்பற்றி அதிகம் தெரிந்துகொள்ள விரும்புபவர் அனுபந்தம் காண்க. அங்குக் குறித்துள்ள சில நூல்களில் டார்வினின் கொள்கைகள் விளக்க மாய்க் கூறப்பட்டிருக்கின்றன.

டார்வினின் அறிவிலும் ஆராய்ச்சித் திறனிலும் மிஞ்சியதாய ஒன்றுண்டு: அது டார்வினின் அடக்கமே! இத்தனை அறிவு மேம்பாட்டுடன் டார்வினைப்போல அடக்கமும் வாய்ந்தவரெனச் சொல்லக்கூடியவர் விஞ்ஞானத் துறையிலும் பின்னும் இரண்டொருவரேயாவர்.

டார்வின் அடக்கத்தின் சிலை என்பதற்குப் பின்வரும் மொழிகளே போதுமானவை; இவை, 'இனப் பிரிவிற்கு மூலாதாரம்'[1] என்னும் அவர் நூலைப் படித்துப் பெரிதும் புகழ்ந்த நண்பரொருவருக்கு டார்வின் கூறிய மறுமொழியாகும்:

"என்னைப்போல, ஒரே விஷயத்தைப்பற்றிப் பல வருஷங்களாகச் சிந்தனை செய்து வருபவர் பலர் உளர். அவர்களுட்சிலர், வெகு காலம் சிந்தித்ததன் பயனாக, பார்த்ததுமே தவறு என்று தெரியக் கூடிய அற்ப விஷயங்களைப் பேருண்மைகளென நினைத்து ஏமாறுவதை நான் எத்தனையோ முறை கண்டிருக்கிறேன்! அவ்வாறு சித்தம் பிரமித்து, சிறிய ஒன்றைப் பிரமாதமாக நினைக்கும் பண்டிதர்களுள் நானும் ஏன் ஒருவனாய் இருக்கக்கூடாது என்னும் எண்ணம் என்னை விடுவதாயில்லை."* என்றும் இளமைபெற்ற புத்

1. "*Origin of Species.*"

* "When I think of the many cases of men who have studied one subject for years and have persuaded themselves of the truth of the foolishest of doctrines, I feel sometimes a little frightened whether I may not be one of those monomaniacs."

தகமெழுதியவர் கூறுவது இதுவானால், பின்னவர் பேசத்தக்கதாய் உள்ளதுதான் எது!

*   *   *

உலக மக்களுள் பொருளுக்கென்றேற்படும் போட்டியில் கலந்துகொள்ளாதவர்களே இல்லை. புகழுக்கேற்படும் போட்டிக்கோ அத்தனை பேர் இல்லை. உண்மை அறிவுக்கான போட்டியில் கலப்பவர் மிகச் சிலரே! இவர்களுட் பெரும்பாலார் விஞ்ஞான பண்டிதரேயாவர்.

இவர்களுக்குள் வீணுக்கு வாதம் என்பதில்லை; நிறம், தேசம், மதம் என்னும் குறுகிய மனப்பான்மைகளும் சிறு நோக்கங்களும் இல்லை; பதவிக்கும், பட்டத்துக்கும், பேராசைக்கும், சுயநலத்திற்கும், அகம்பாவத்திற்கும், மூட நம்பிக்கைக்கும், குருட்டு எண்ணங்களுக்கும் அடிமைப்படுவதும் பலியாவதும் இவரிடம் இல்லை. தொட்டனைத்தூறும் மணற்கேணி போன்றும், செல்லச் செல்ல இனியும் சென்றுகொண்டிருக்கும் முடிவில்லாப்பாதை போன்றும், நுனியிலிருந்து தின்னத் தின்ன மேன் மேலும் தித்திக்கும் கரும்பு போன்றும் உள்ள அறிவை வளர்ப்பவர்கள், வேறொன்றிலும் அறிவைச் செலுத்த மாட்டார்கள்.

அத்தகைய அறிஞர்களின் கூட்டத்தில் காணப்படுவதே பெருமையிலும் பெருமையாம். ஆனால், டார்வினின் பெருமையோ, அத்துடனும் நிற்பதாயில்லை. மணிகளுள் வைரம் என்னும்

பெருமையும், மலைகளுள் இமயம் என்னும் பெருமையும் டார்வினுக்கே உரியதாம்.

'1809-ஆம் ஆண்டு பிப்பிரவரிமீ 12உ உலகத்தில் தோன்றிய மற்றக் குழந்தைகளெல்லாம் அப்பொழுதோ, பின்னையோ இறந்துபட்டன. ஆனால், அவைகளுள் ஒன்றுமட்டும் இறக்கவில்லை. அஃது இறக்கும் வழியை இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. அஃது இறப்பதும் நடக்கக்கூடியதன்று,' என்றொருவன் கூறினால் அது கவிஞனின் கூற்றுமன்று ; மதியிழந்த பித்தனின் சாற்றுமன்று; அது டார்வின் விளைத்த புதுமையேயாம் !



# 3

# பெர்ஸி பிஷே ஷெல்லி[1]

*[கவிஞன் தனிப்பிறவி. அவன் அழகுத் தெய்வத்தையும் உள்ளத்து உணர்ச்சிகளையும் தன் கவிதை மூலமாக உலக மக்களுக்குப் புலப்படுத்துபவனுவன். ஷெல்லியோ அழகின் சித்திரக்கோல்; உணர்ச்சிப் பெருக்கு; கற்பனைக் களஞ்சியம். மனிதனுக்கு அமரத்துவம் உண்டு என்று வாதாடும் கவிச்சக்கரவர்த்தி ஷெல்லியே.]*

தத்தம் வாழ்நாளிலேயே உலகத்தவரால் நன்கு அறியப்பட்டு அழியாப் புகழுக்கும் உரித்தானவர் என்று சொல்லக்கூடியவர் மனித சரித்திரத்தில் மிகச்சிலரேயாவர். சாக்கிரடீசு[2], இயேசு கிறிஸ்து, முகம்மது நபி போன்ற பெரியார்களுக்கும் புகழ் என்பது அவர் வாழ்நாளில் உண்டானதில்லை.

கவிஞனுக்கோ எனில், புகழ் முதுகாடடைந்த பின்னரேயாம். கம்பர், காளிதாஸர், ஷேக்ஸ்பியர்[3], மில்டன்[4], பர்ன்ஸ்[5], ஹோமர்[6], தாந்தே[7], கீதே[8], ஷெல்லி, பாரதி என்னும் வரகவிகளுள் எவருக்

---

1. Percy Bysshe Shelley (1792—1822)
2. Socrates
3. Shakespeare
4. Milton
5. Burns
6. Homer
7. Dante
8. Goethe

குத்தான் புகழ் அவர் சாகு முன் வந்ததாகக் கூறுவது! கவிஞன் வெந்து பிடி சாம்பரான பின்னரே அவனுக்குப் பேரும் புகழும் ஏற்பட்டன என்பது தொல்விதியாய்விட்டது!

அவன் வாழ்நாளெல்லாம் வாளா இருந்து முதுகாடு போகு நாள் வந்ததும் அவனை "ஆஹா! இவன் கவிஞனே," என்பதும், "என்னே இவன் கவிதை!" என்பதும் உலகத்திற்கியற்கையுமாய் விட்டது. இறந்து பல்லாண்டுகள் கழிந்தும் சில கவிகளுக்குப் புகழ் இன்னமும் வந்துற்றதில்லை. அது நடு வழியில் சிக்கி, இடர்ப்பட்டுக்கொண்டிருக்கிறது.

உலகம் கவிஞனை அவன் இருக்கும் நாளிலேயே பெருமைப்படுத்துவதில்லை என்பதற்காக வருந்தி, இனியாகிலும் கவிஞனுக்கு அவன் உயிருடனுள்ள போதே அன்னமும் ஆடையும் கொடுத்து ஆதரியுங்கள் என்று கூற நாம் முன் வருவதாக நினைக்கவேண்டா. அவ்வாறெல்லாம் பேசிக் கவிஞன் பெருமையைக் குறைக்க நாம் விரும்பமாட்டோம்.

புகழ் கவிஞனுக்குப் பிச்சையாக வேண்டா. அவனுக்கென்றே புகழ் படைக்கப்பட்டிருப்பதைக் கவிஞன் அறிவான்; இறந்த பின் புகழ் என்றைக்கும் தனக்கே உரித்தாவதையும் அவன் உணர்வான். ஆகவே, அவன் புகழைப் பிச்சையாக ஏற்பதை விரும்பமாட்டான்.

மேலும், அவனுக்காகப் பிறர் பிச்சை புகுவதிலும் அவனுக்கு வெறுப்பே. கற்பனைக் களஞ்சியமாயும் சித்திரக்கோலாயும் அவனிருப்ப, பிறர் அவனை வாய் பேசுவதுமறியாத ஊமை போல வைத்து, “இவன் பேசுவதில்லை; இவனுக்குப் பிச்சையிடுங்கள்,” என்று கூறுவதை அவன் எவ்வாறு பொறுப்பான்?

எனவே, உலகத்திடையே இருந்தும் எளிய ஜீவனத்துக்கு வேண்டப்படுவதும் இல்லாதவனுய், உலகவியல்பை உள்ளும்புறமும் அறிந்திருந்தும் ஒரு சிறிதும் தனது பெருமை அறியப்படாதவனுய் மக்களிடையே சில நாள் வாழ்ந்து, ஒரு நாள் சரேலென மறைவதே கவிஞனின் இயல்பாயிருக்கிறது.

வாழ்நாளில் உலகம் அவனை அறிந்து போற்ருதிருந்தும், உண்மைக்கவிக்கு உலகத்து மக்களிடம் சீற்றமோ சினமோ சிறிதாவது இல்லையாம். பெருங்கவி, மக்களின் நற்ருய். இனித் தோன்றவிருக்கும் மக்களுக்கும் கவிஞன் தாயே. தாய் மகவை நொந்ததாக நாம் எங்குக்கேட்டிருக்கிருேம்? ஆகவே, உலகம் என்ன செய்தும், கவிஞனுக்கு உலக மக்களிடம் உள்ள பேரன்பு திரிவதில்லை.

மேலும், உலகத்தியற்கை அவன் அறியாததா என்ன! அதுவும் தெரியாதவனுக்குக் கவியென்பதோ பெயர்!

பகலவன் போல் அவன் வானிடையே நின்று வெள்ளைவெளேரென்று பகலெல்லாம் கவிச்சுடர் காயும்போது, உலக மக்களுக்குக் கண் கூசும் என்பதை அவன் அறிவான். அவன் வாழ் நாளில் எறிக்கும் பேரொளியைக் காண வல்ல கண்கள் பாமரருக்கில்லை என்பதை அவன் நன்கு அறிவான்.

'வானவராய் வாழவேண்டிய மக்கள், இன்றிருந்து நாளை போம் வானரங்களாய் வாழ்வ தேன்?' என்று அவன் மனங்கொதித்துச் சொல்லும் சொற்களின் வெப்பத்தை உலகம் தாங்க இயலாது என்பதை அவன் அறிவான். கவிதையின் வெப்பத்திற்கஞ்சித் தன் மக்கள், மர நிழல்களையும், மறைவிடங்களையும் தேடிப் பதுங்குவதையும் அவன் அறிவான்.

ஏது செய்தும் பயனில்லாமற் போகவே, "இனியாவது என் மக்களுக்கு ஒளி தெரியட்டும்! அவர்கள் இதயத்தில் இன்பக்கனல் மூளட்டும்!" என்றவன் நினைத்தே கடைசியாக மறையச் சம்மதிக்கின்றான். அவன் கருணை எண்ணமே அவனுக்குச் சுடலைக்கு வழி காட்டியாம்!

அவன் மாலைவாய் விழுந்து மறைவதுதான் தாமதம்; அதுவரை அறியாத அனைத்தையும் உலகம் அரைநொடியிலறிந்துகொண்டு, தாயின் குரலைக் கேட்டும் ஆவினைக்காணாத இளங்கன்றினைப்போல அது "கதிரவன் எங்குச் சென்றான்?

எவண் ஒளிந்தான்? நாம் பார்க்குமுன் எப்படி மறைந்தான்? இனிக் கதிரவனை என்று காண் போம்! என்று காண்போம்!'' என்று கதறியழ ஆரம்பிக்கின்றது.

அதுவரை ஒளி காண அஞ்சிய கண்கள், தமது கூச்சமெல்லாம் நீங்கி, வானிடையே காணும் செவ்வொளியின் கோலாகலத்தையும், நீலத்தின் சொல்லொணு வனப்பையும் கண்டு கண்டு, " இதுவா ஒளி! ஒளிக்கு இத்தனை வனப்பா! என்னே நாம் ஈதறியாதது! ஒளியின் எழிலைக் கண்டு களியாமல், நாம் பகலெல்லாம் கண் மூடியது என்னே!'' என்று நினைந்து பச்சாத் தாபப்படுகின்றன.

அதுவரையிற் கவிதையின்பத்தைக் கேட்க வும் விரும்பாத செவிகள், தமது செவிடு நீங்கிக் கவிஞன் இசைத்த இன்னிசைத் தீங்கவியைக் கேட்டுப் பேரானந்தங்கொண்டு, "கவிதை இன் பம் இதுவோ! இசைக்கும் இத்தனை தித்திப்போ! இதுவரையிற் கேளாத பாட்டினைக் கேட்டோம்! மேனி புளகித்தோம்! எம்மையும் மறந்தோம்!'' என்று ஆனந்தக் கூத்தாடிப் பின், "ஆனுல், பாட் டிசைத்த குயிலெங்கே! மோகனப் பாட்டி சைத்த வண்ணக் குயில் எங்கே!'' என்று பரித வித்துக் கவிக் குயிலைத் தேடியலைகின்றன.

அதுவரையிற் கவிஞனை ஏசியே இன்புற்ற வாயும், தனது நச்சுப் பல்லை ஒடித்தெறிந்து, அவனை வாயார வாழ்த்துகின்றது.

"கவிஞா, இன்றல்லவோ நான் உன் பெருமையை முற்றுமறிந்தது! நீ இல்லையேல், இயற்கைக்கு எழிலேது? உணர்ச்சிக்கு உயிரேது? மனத்திற்குக் கற்பனை ஏது? கவிதையில்லையாயின், அழகுக்கு உருவேது? கருத்துக்குச் சொல்லேது? சொல்லுக்கு வனப்பேது? வனப்புக்குத்தான் வனப்பேது?

"கவி யாவன் என்றும், கவிதை யாது என்றும் அறியாத நிலையில் நான் உன்னை என்னென்னவோ நிந்தனை செய்தேன்!

"கவிஞா, என்னை நீ மன்னிப்பாயாக! 'பகைவனுக்கருள்வாய்,' என்ற கருணை மொழியை எனக்குக் கற்பித்த கவிஞா, என் பிழை பொறுத்தருள்வாயாக!" என்று ஏதேதோ கூறித் துதிக்கின்றது.

மேலே கூறிவந்த அனைத்தும் நமது கற்பனை வெள்ளம் என்று எண்ண வேண்டா. இங்கிலாந்தும், ஆங்கிலம் போற்றும் ஏனைய நாடுகள் அனைத்தும் ஷெல்லியைக் கவிதையின் சிகரமாகவும் இசைக் குயிலாகவுமே வைத்து வந்தனை புரிகின்றன.

ஷெல்லியை உலக கவிகளுள் ஒருவன் என்பதில் ஐயமே வேண்டா. அத்தாட்சிகள் வேண்டுமானால், வாணாளெல்லாம் அவனுக்கு வசைமொழியே என்பதும், அமைதியுடன் வாழத் தாய் நாட்டில் அவனுக்கு வசதியும் இல்லை என்பதும், அயல் நாடு சேர்ந்து அங்கே மறைந்தே வசிக்க நேர்ந்தது என்பதும், அவன்

பாடும் நாளெல்லாம் கண்ணெடுத்தும் பாராத இங்கிலாந்து, அவன் வாய் மூடு நாள் வந்த பின் "அய்யகோ மகனே!" என்றதுமே தக்க சான்றுகளாகும்.

*　　*　　*

இடம்: இத்தாலியின் கடற்கரையில் ஓரிடம்*
காலம்: 1822ஸு ஆகஸ்டுமீ 15உ

இப்புத்தகத்தை வாசிக்கும் தோழர்காள், தோழிகாள், மனக் குதிரைமீதேறி என்னுடன் வாருங்கள்! இத்தாலிக்குச் சென்று ஷெல்லியைக் கண்டு தரிசித்து வருவோம், வாருங்கள்!

கவியரசு கடைசியாகக் காட்சி அளிக்கின்றான்! ஷெல்லி மறையுமுன் அவனைக் கண்டு தரிசித்து வருவோம் வாருங்கள்! அகக்கண்ணைத் திறவுங்கள்! ஷெல்லி காட்சி கொடுப்பான்!

அதோ பாருங்கள்! ஆம், அவனே ஷெல்லி! ஆம், அதுவே ஷெல்லி! ஆம், அவரே ஷெல்லி!

ஷெல்லி தற்சமயம் சுடலையில் அடுக்கப்பட்ட விறகின்மேல் சயனித்துக்கொண்டிருக்கிறான்! அவன் மான் விழிகள் மூடிவிட்டன! அவன் காதுகளும் கேட்பனவாயில்லை. அவன் வாய் பேசுவதும் இனி இல்லை.

ஷெல்லிக்குச் சுவாசம் இல்லை என்பதனால் அவனைப் பிணம் என்று கருதாதீர்கள். வைத்தியர்கள் பிணமென்று குறிப்பது, கவித் தெய்வம் குடியிருந்த திருக்கோயிலையன்று!

---

* *Via reggio* was where Shelley's corpse was cremated.

ஷெல்லி இறந்துவிட்டான் என்ற நினைப்பும் வேண்டா. ஷெல்லி இறக்கவில்லை. ஷெல்லிக்கு இறப்பு இல்லை. ஷெல்லி போன்ற கவிகளுக்கு இறப்பு ஏது?

"உடலெல்லாம் ஊனங்கண்டிருக்கின்றதே! ஆங்காங்குச் சதைப்பற்றும் காண்பதற்கில்லையே! இவ்வுருவமா ஷெல்லி!" என்பீர்கள்.

ஆம்; இவ்வுருவமே ஷெல்லி. இத்திருவுருவமே ஷெல்லி! சந்தேகம் எள்ளளவும் வேண்டுவதில்லை.

வேண்டுமானால், சட்டைப்பையுட் பாருங்கள்! ஒன்றில் கீட்ஸின் செய்யுட்கள், மற்றொன்றில் சோபகிளீஸின் பெருநூல்கள்.* நாமறிந்த வேறு எவர் சட்டைப்பையுள் இத்தகைய புத்தகங்களைக் கண்டிருக்கிறோம்?

ஆங்காங்குக் காணப்படாத சதைப் பற்று எல்லாம் ஷெல்லி கடலிலுள்ள மீன்களுக்கிட்ட விருந்து; அவன் உடலின் வீக்கமும், கடலரசி கவியரசைக் காதலித்துத் தழுவியதன் வீக்கம்!

'வனப்பில்லாச் சவத்தைக் காட்டி அதை ஷெல்லி என்றது சமத்காரமே!' என்பீர்கள்.

'வனப்பினுக்கு வனப்புச் செய்த வானவனுக்கு உடல் வனப்பெதற்கு?' என்னும் நம் கருத்தை ஏற்

* The volume of Sophacles in one pocket and Keats' poems in the other were among the chief evidences by which the mangled and mutilated body was identified as Shelley's, after remaining in the sea for many weeks.

காதவருக்கெல்லாம், நாம் கூறிவந்தது சமத்கார மட்டுமன்றி, சாதுரியமுமாகும்!

* * *

கவிக்குச் சிறப்பு வந்துறுவது எல்லாம் அவன் இயற்றிய கவிதை வாயிலாகவேயன்றி, அவனது வாழ்க்கைச் சரிதை வாயிலாகவன்று. ஷெல்லியின் தனிச் சிறப்பை எடுத்துணர்த்து வதே நம் கொள்கையாதலால், அவனது வாழ்க் கைச் சம்பவங்களின் பட்டிக்கணக்கை இங்கு எதிர் பார்த்து ஏமாற்றமடைதல் வேண்டா.*

வாழ்க்கை என்ற பெருநாடகத்தை ஷெல்லி தனிமுறையில் நடித்தான். அவன் வாழ் நாளில் அவன் எதுவெதுவோ செய்தான்; மனம் சரி என்ற அத்தனையும் செய்தான். மனச்சாட்சி நேர் என்றதும், எது செய்யவும் ஷெல்லி அஞ்சான். அச்சமென்பதும், கூச்சமென்பதும், பயந்து நடுங் குவதும், அடங்கி ஒடுங்குவதும் ஷெல்லி அறியா தனவேயாம்.

அவன் செய்தவையெல்லாம் சரியல்ல என்று பலருக்குப்பட்டது; அவை சரியே என்றுணர்ந்த சிலரும், பயந்து வாளா இருந்தனர். ஷெல்லியின் நாட்டமோ, இவ்விரு திறத்தாரிடத்தும் இல்லை. சாகாமை நிலை ஒன்றே, அவன் கண்கள் நிலைத் துக்கண்டதும், இனித்துக் கேட்டதும், வருந்தி முயன்றதுமாகும்.

கவிஞனைக் குற்றவாளியெனக் கருதி, நியாய சபைக்கிழுத்துக் கூண்டிலேற்றி விசாரிக்க நாம்

---

* அனுபந்தம் காண்க.

விரும்பவில்லை. அவனது வாழ்க்கைச் சம்பவங்களை விவரித்து, இவையெல்லாம் நீதி முறைக்கு அடங்கியவை, பிற முரண்பாடு என்று தீர்ப்புச் சொல்லவும் நமக்கு நா எழவில்லை.

கவிஞனை அறிந்து ஏற்பவருக்கு அவன் செய்யும் அத்தனையும் சரியே. ஏனையருக்கோ எனில், அவன் செய்யும் ஒவ்வொன்றும் சரி அன்றே! அன்னாருக்கு அவன் **கண்** பார்த்ததும் குற்றம்; கை தொட்டதும் குற்றம்; கால் பட்டதும் பெருங்குற்றமேயாம்!

ஆகவே, ஷெல்லியின் வாழ்க்கையில் நாம் குறிக்க விரும்புவனவாய் உள்ளவை பின் வருவனவே :

ஷெல்லி பிறந்ததும் வளர்ந்ததும், முப்பதாண்டு முடியுமுன் கடலினுள் மூழ்கி இறந்ததும் செல்வர்களிடையேதான். அவன் 6000 ரூபாய் மாத வருமானமுள்ள சொத்துக்கும் பிரபு என்ற பட்டத்துக்கும் உரியவனாவன்.*

ஷெல்லியைக் கருவுற்று ஈன்றெடுத்து 'என் குழந்தை' என்று கருதிய பெருமை எலிசபெத்து என்னும் மாதரசியைச் சேரும். நெடிய உருவமும் உடல் வனப்பும் ஷெல்லி தாயினிடமிருந்து பெற்றதாகச் சொல்லப்படுவனவாகும்.

ஷெல்லியை 'என் விளையாட்டுத் தோழன்' என மதித்துக் கூடிக்குலவிக் களித்து இனித்த

* Percy was the grandson of Sir Bysshe Shelley and incumbent to the title after the baronet's death in 1815. His father was Timothy Shelley.

பெருமை, அவன் சகோதரிகள் மூவரையும் சென்றடையும். அவர்களுக்கு ஷெல்லி உடன் பிறந்தவன் மட்டுமல்லன்; கவிதை மயிலும் இசைக்குயிலுமாவன்.

ஷெல்லியை '**என் தோழன்**' என்றும், '**என் சீடன்**' என்றும், '**என் சற்குரு**' என்றும் பற்பலவாக விளித்து, அவன் தோளொடு தோளசைத்து, 'சரி' என்றபோதெல்லாம் தலை அசைத்து, 'அன்று' என்ற போது அஞ்சாது மேற்சென்று இடித்துரைத்து, இன்னல் வந்துற்றகாலை அருகாமையே இருந்து 'அஞ்சேல்!' எனத் தேற்றி, நட்பினுக்கென்று எதையும் செய்த பெருமை ஹாகு[1] என்பவருக்கே உரித்தானதாகும்.

ஷெல்லியை '**என் காதலன்**' என்று நினைத்த பெருமைக்கு உரிய பெண்டிர் பலர். அவர்களுள் ஷெல்லி மணந்தது **ஹாரியட் வெஸ்ட்புருக்கு**[2] என்பவரையும் **மேரி காட்வின்**[3] என்பவரையுமாம்.

ஷெல்லியின் வாழ்நாள் முழுவதும் அவனை 'முறை தவறியவன்' என்ற பெருமையும், 'சற்றும் கீழ்ப்படியாதவன்' என்ற பெருமையும், 'நீதி உணராதவன்' என்ற பெருமையும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இங்கிலாந்து மக்கள்

1. Thomas Jefferson Hogg
2. Harriet Westbrook
3. Mary Wollstonecraft Godwin

இருநூறு லட்சம் பேர்களுக்கும் உரித்தானதாகும்!

* * *

'முப்பதாண்டுக்குள் முடிந்த நாடகத்துக்கு இத்தனை பெருமையா!' என்னலாம். ஆம்; அதற்கு இத்தனை பெருமையே, அதன் கதா நாயகன் ஷெல்லி என்பதனால்!

ஷெல்லிக்கு இத்தகைய பெருமையும் புகழும் ஏற்படக் காரணம் யாது என்பதைச் சற்று விளக்கிக் காட்டுவோம்:

**எழில் வருணனை, உணர்ச்சியறிவிப்பு, கற்பனு சக்தி**[1] என்ற மூன்றும் கவிதைக்கு முக்கியமாக வேண்டப்படுவனவாகும். இவற்றுள் ஒவ்வொன்றிலும் ஷெல்லிக்கு இணையாகச் சொல்லப்படுபவர், நாம் முதலில் குறித்த தொகுதியில் உள்ளவராய மிகச் சிலரேயாவர்.

**எழில் வருணனை** என்பது அழகின் ஓவியம்; அதுவே வனப்பின் சித்திரிப்புமாகும். அத்துறையில், புகழ் படைத்தவர்களான கம்பர், காளிதாசர், ஷெல்லி என்ற மூவருள், எவர் முதன்மை வகிக்க உரியவர் என்று கூறுவது மிகவும் கடினமாகும். ஆனால், சிலருக்கு அதுவும் எளிதே! ஆங்கிலமே அறிந்தவருக்கு ஷெல்லியின் வருணனையே வருணனை! தமிழ் மட்டுமே கற்றவருக்குக் கம்பரைப்போல வருணனையில் வேறெவரும் இலராவர்! வடமொழிப்பற்று மிகுந்த

---

1. Beauty, emotion and idealism constitute the three major elements in poetry.

வருக்கோ, வருணனைக்கு உவமையில்லாதவர் காளிதாசரே!

**உணர்ச்சி அறிவிப்பு** என்பது மன நிலையின் விளக்கம். அதுவே உள்ள நிகழ்ச்சிகளின் புகைப்படமுமாம். **காதல், ஊடல், கூடல், பிரிதல், பரிதல்** முதலிய பேருணர்ச்சிகளைக் கவிஞன் எவ்வாறு தோற்றுவிக்கின்முன் என்பதையே நாம் '**உணர்ச்சி அறிவிப்பு**' என்று குறித்தோம்.

ஷெல்லியோவெனில், உணர்ச்சிகளின் பெருக்கு. உணர்ச்சியறிவிப்புக்கு முக்கியமாக வேண்டப்படுவதான **இசைச்சுவை**[1] ஷெல்லிக்கு உடன் பிறந்ததாகும். ஆகவே, அவன் இத்துறையில் சிகரங்களாக வைத்து எண்ணப்படும் **ஹோமர், தாந்தே, பர்ன்ஸ், பாரதி** என்பவருள் எவருக்கும் சளைத்தவனல்லன்.

இங்கொன்று குறித்தல் அவசியமாகின்றது: ஷெல்லியின் கவிதையில், மற்றெல்லா உணர்ச்சிகளினும் சுதந்திர உணர்ச்சியே மேல் நிற்பதாக உலகம் நம்பி வருகிறது. இதிலுள்ள தவற்றை எடுத்துக்காட்ட விரும்புகிறோம்.

உணர்ச்சிகளில், சுதந்திர உணர்ச்சி சாதாரணமானது. அது பேருணர்ச்சிகளுள் ஒன்றன்று. இவ்வுணர்ச்சியை அறிவிக்க மேலான கவித்துவம் வேண்டப்படுவதில்லை. காணி நிலத்திற்கும் நான்கு பசுவுக்குமாகத் தேசீய கீதம் அமைக்கும் சிறு புலவர்களிடமும் இதன் வல்

1. Vital to the description of emotion in poetry are the music, the rapture and the pathos of words.

லமை முற்றிலும் கண்டுவிடலாம். 'என் தேசத்தைப்போல வேறெது உண்டு!' என்னும் இறுமாப்புக்கூடச் சுதந்திர உணர்ச்சியைப் பெருக்க வல்லதாம்.

இரடியார்டு கிப்ளிங்கு[1] போன்ற கவிகள் அறிந்தனவாய் உள்ள உணர்ச்சிகளில் பெரிதும் இதுவே. அவர் வல்லமையுடன் கையாண்டதும் இஃது ஒன்றே. விரிந்த உள்ளமும், உலக முற்றும் பரந்த நோக்கமும் அமைந்த ஷெல்லியையும் அவ்வாறே எண்ணி, ஒரே பாட்டுத் தெரிந்த சங்கீத வித்துவானுக்குவது சரியன்று.

உதாரணமாக, பெண்ணொருத்தி இருந்தாள். அவள் பெற்ற பிள்ளைகள் பல. அவற்றுள் ஒன்று சப்பாணிப்பிள்ளை. அதனால், அவள் சப்பாணியைப் பெற்ற பெண் என்பது எவ்வாறு பொருந்தும்? உவமேயம் தெரிந்துகொள்க!

கற்பனா சக்தி என்பது மனக்குதிரையின் ஓட்டம். அஃது அகக்கண்ணின் வீச்சு. அது மனோபாவத்தின் ஆகாயச் சஞ்சரிப்பு.

கற்பனைக்குத் தாயும் மகவும் கவிஞனே! கவிஞனுக்குத் தாயும் மகவும் கற்பனையே!

ஷெல்லியின் கற்பனா சக்தி இமயத்தை ஒத்தது; வானளாவியது; ஐந்து கண்டத்தின் மக்களையும் ஒரு தாய் மக்களாகவே பாவிப்பது!

உலகத்தில் மக்கள் எத்தனையோ சீருடனும் சிறப்புடனும் இன்புற்று வாழ ஏதுக்கள் எத்

1. Rudyard Kipling

தனையோ இருந்தும், அவற்றுள் ஒன்றையும் பொருட்படுத்தாதவராய், 'பொன்' என்றும், 'நான் புழுத்தமண்' என்றும் கானல் நீருக்கலைந்து, இல்லாத தெய்வங்களுக்கெல்லாம் பூசையிட்டு, வாழுநாள் முழுதும் வாட்டமே கண்டு மடியும் தன் மக்களை வானிடையே நின்று காண்கின்றான் கவி.

அவன் கண்கள் நீர் சொரிகின்றன. "என் ஆருயிர் மக்காள், சாகாமை என்னும் ஒரு நிலை நாடாது, எதுவெதுவோ நாடுவது என்?" என்று பெருவழி காட்டிக்கொடுக்கின்றான் ஷெல்லி.

மேலும், தியாகத்திலே ருசி, சேவையிலே சுகம், அருளிலே ஆனந்தம், பிறர் இன்பத்திலே இன்பம், அவருக்காகத் தான் ஏற்கும் துன்பத்திலும் இன்பம் என்னும் பேருண்மைகளை அறியாதவராய், போர் புரிவதிலும், பொருள் பறிப்பதிலும், பிறரை அடிமை கொள்வதிலும், அடக்கி ஆள்வதிலும் 'நான்' என்பதிலும் 'என்னிலும் சிறியாய் நீ,' என்பதிலுமாக இன்பங்காண நினைத்துழலும் தன் குருட்டு மக்களைக் கவி விண்ணிடையே நின்று பார்க்கின்றான்.

அவன் இதயத்து அருள் சுரக்கின்றது. "என் இனிய மக்காள், இன்னலைச் செய்து இன்ப மடைவது எவ்வாறு? அது போகா ஊருக்கே வழி," என்று அருள்மொழி கூறுகின்றான் ஷெல்லி.

இவ்வாறு மானிடனை வானவனாகவே மதித்து, உலகத்து மக்களை எல்லாம் தன் மக்க ளாகவே பாவித்து, ஒவ்வொருவருக்கும் ஒளி, ஒவ்

வொருவருக்கும் இன்பம், ஒவ்வொருவருக்கும் அழியா நிலையும் சாகா வரமும் அளிப்பவனாய கவிவள்ளல் ஷெல்லி ஒருவனேயாவன்.

தேசீய உணர்ச்சியென்ற காட்டாற்று வெள்ளத்தில் அகப்பட்டுழலாத போதெல்லாம் பாரதியும் ஷெல்லியே.

* * *

இறந்த பின்னும் கவியை அறிந்து பெருமைப்படுத்தாத சிறுமை மேல் நாட்டவரிடம் பெரும்பாலும் காணப்படுவதில்லையாம். அவர்கள் ஷெல்லியை நன்கு அறிந்தவர்களே. எனினும், அவர்கள் அறியாத இரண்டொன்றும் உண்டு என்பதைக் குறிக்க விரும்புகின்றோம்:

'கவி யாவன்?' என்னும் போதும் 'கவிதை யாது?' என்னும் போதும், இத்தனை அறிவு விரிந்த அவர்களுக்கும் புத்தி மாருட்டம் காண்கின்றது! இதை விளக்க இரண்டொன்று கூறுவோம்:

கவி பாமரனல்லன். முகத்திரண்டு கண் என்பதுடன் நில்லாது, அவனுக்கு அகக்கண்ணும் உண்டு. அவன் செவி, இசையறியும் செவி. அவன் உடல், உணர்ச்சியறிவிக்கும் அற்புதக் கருவியாம். மனிதப் பிறவியில் அவன் தனிமையினும் தனி.

அவனுக்கு உவமையாகச் சொல்லக் கூடியவை யாவை எனில், பசும்பயிர்களிடையே தோன்றும் இனிய மலர்களிலே வாசம் செய்யும் வண்டினங்களும், விவரிக்கவொண்ணு வனப்பைப் பெற்ற பட்டுப் பூச்சிகளுமேயாம்.

இவ்வற்புத உயிர்கள், பூக்களில் உள்ள நறுந்தேனை உண்டு மதி மயங்கிக் களி வெறி கொண்டு ரீங்காரம் செய்வதையும், குணவுறுதி இல்லாமல் இங்குமங்கும் பறப்பதையுமே பாமரர் அறிந்துள்ளனர்.

பலர் அறியாது, ஜீவ நூல் அறிந்த ஒரு சிலர் மட்டுமே அறிந்த பேருண்மை யாதெனில், மலரிலே பிறந்து, மலரிலே வளர்ந்து, மலரிலே உள்ள நறுந்தேனை உண்டு, குணவுறுதி இல்லாமல் மலரிடையே வாழ்ந்து, குறுகிய கால அளவுக்குள் அம்மலரடியிலேயே மடியும் **இவ்வற்புத உயிர்கள் இல்லாவிடில்,** மகரந்தம் மலருக்கு மலர் பரவுவதில்லை; அது பரவாவிடில், பூக்கள் பிஞ்சாவதில்லை; பிஞ்சில்லையேல், காயும், கனியும், கதிரும் இல்லையாம்; அவை இல்லையேல் **பயிரில்லை; உயிரனைத்தும் இல்லை.**

ஆகவே, பயிர், பறவை, விலங்கு, மனிதன் என்னும் அத்தனை உயிருக்கும் ஆதாரமாய் நிற்பவை, மதுவுண்டு முரலும் வண்டினங்களும், குணவுறுதியில்லாமல் மலர் விட்டு மலர் தாவும் பட்டுப் பூச்சிகளுமேயாம்.

உவமானத்திற்கு முற்றிலும் பொருந்துவதாய உவமேயமே கவியாவன்! அவனில்லையேல், கருத்துக்குச் **சொல்லெங்கே?** சொல்லில்லாது **மொழி எங்கே?** மொழி இல்லாது கருத்துக்கு **அழியா நிலை எங்கே?** அழியாப் பெருங்கருத்துக்களில்லாமல் **முன்னேற்றமெங்கே?**

இவையெல்லாமில்லாமல் வாலில்லாக் குரங்குக்கு மனிதனென்ற பெயரெங்கே? அம்மனிதனும் வானவன் போலவே, "சாகாமையே நமது நாட்டம்; பேரின்பமே நாம் கோரும் பதம்," என்று பேசுவதும் எங்கே?

ஆகவே, ஷெல்லி போன்ற வரகவிகளின் பெருமையை இனியாவது உலகம் அறிவதாக! கவிஞன் தனிப்பிறவி என்னும் உணர்ச்சியும் இனிப் பெருகுவதாக! வாழ்நாளில் அவனை வந்தனை செய்யாவிடினும், நிந்தனை செய்வதும் வாதனை செய்வதும் தண்டனை செய்வதும் நிற்பனவாக! அவை நில்லாவிடினும், சிறிதளவுக்காவது குறைவனவாக!



# 4

# பெர்ல் ஸைடன்ஸ்ரைக்கர் பக்கு[1]

*[சீனத்தைப்பற்றி இருபது ஆண்டுகளுக்கு முன் நாம் அறிந்தனவாக உள்ளவை சீனத்து வெடிகளே! ஆனால், தற்சமயமோ, சீனத்தையும் சீனரையும் அறியாதவரே இல்லை என்னலாம். இவ்வாறு சீனத்தை உலகுக்கு அறிவித்தவை பெர்ல் பக்கு அம்மையாரின் அரிய நூல்களேயாம். இவரை இருபதாம் நூற்றாண்டில் சீனத்துக்கென்று அமெரிக்காவில் பிறந்த அவ்வை எனலும் அமையும்.]*

மனிதப்பிறவியில் ஒரு சிலரைத் துக்கிக்கவே பிறந்தவர் என்னலாம். இவர்களது துக்கத்திற்குத் தான் எத்தனை காரணங்கள்! இவர்களுக்கு இதற்கென்றும் துக்கம், அதற்கென்றும் துக்கம்!

காலத்தெய்வம் களைத்துப் படுக்காமல் கடுகி நடக்கின்றதே என்றும் இவர்களுக்குத் துக்கம்! ஆடவன் என்பவன் 'அரைப் பெண்' என்பதும் பெண் எனப்படுபவள் 'பாதியும் ஆடவனே' என்பதும் ஜீவ நூலளவாக[2] உண்மை என்பதன்றிச் சமூக வாழ்க்கையிலும் உண்மையாகுங் காலம் நேர்ந்ததே என்று நினைக்கும் போதோ, இவர்களுக்குத் தாங்கொணாத்துக்கம்!

---

1. Pearl Sydenstricker Buck (Born in 1892)
2. Biology

பாவம்! இப்படித் துக்கிப்பவரைக் காணவும் நமக்குத் துக்கமாயிருக்கிறது! ஆனால், இன்னார் துக்கத்திற்கு முடிவேயில்லை என்றே தோன்று கிறது. ஏனெனில், கலை, விஞ்ஞானம், அரசியல், சமூகத் தொண்டு என்பவற்றுள் ஒவ்வொரு துறையிலும் பெண்கள் தீவிரமாக முன்னேறி வருகிறார்கள். முன்னேற்றம் என்னும் பதத்தினால் நாம் எதையோ ஒன்றைக் குறிக்கின்றோமெனத் தவறாக எண்ண வேண்டா. நடை, உடை, பாவனைகளில் உள்ள ஏற்றத்தாழ்வுக்கும் குலுக்கு மினுக்குக்கும் 'முன்னேற்றம்' என்னும் பெயர் இல்லை! அறிவின் எல்லைப்புறங்களிலே, பேரறி ஞர் நடக்கும் தனிவழிப் பாதையிலே ஆண் மக்க ளுக்குச் சமமாய்ப் பெண் மக்களும் காணப்படு கின்றார்கள் என்பதையே முன்னேற்றம் என் னும் பதத்தினால் நாம் குறிக்க நினைத்தோம்.

பெண்மக்கள் இவ்வாறாக முன்னேறி வந்தி ருப்பதை இன்னும் பலர் அறியவில்லை. மேலே சில பேர்வழிகளைக் குறித்தோமல்லவா? அவர் சுகக் கனவுகளில், இன்றும் பெண் என்னும் பதத் திற்கு ஒன்றே பொருள்! ஆணின் அடிமையையே பெண் என்னும் அன்னார் அகராதி! அந்த மகான்களுக்கு ஞாபகமாகும் சிற்சில சமயங் களில், பெண் என்னும் பதத்திற்கு 'அடிமை' என்னும் முக்கியப் பொருளுடன், 'தாய், மனைவி' போன்ற வேறுசில பெண்பாற்பொருள் களும் இருப்பதாகத் தோன்றுவதும் உண்டு.

எனினும், ஆளப் பிறந்தவன் ஆண் பிள்ளையே என்பதும், அடிமை செய்யப் பிறந்தவள் பெண் பிள்ளையே என்பதும் அவருக்கு நிலைத்த இன்பக் கனவாகும்.

அவர்தம் கனவையும் தூக்கத்தையும் கலைக்கத்தான் எத்தனை பேரரவங்கள், எத்தனை பெரு முழக்கங்கள்!

அவ்வை என்றொரு பெருமாட்டி ஆதிநாளில் பண்டைத் தமிழ் நாட்டிலே பாணர் குடிப்பிறந்து கன்னியாகவே வாழ்ந்து, உலக மக்களனைவருக்கும் அறிவுப்பாலூட்டும் பேரன்னையாய் விளங்கி, அரச சபைகளில் வள்ளுவர், கம்பர் போன்ற புலவருக்குச் சமமாய் வீற்றிருந்து, செருக்குற்ற புலவர்களை வாது செய்து வென்று, இம்மெனுமுன் இருநூறும் முந்நூறுமாக இசைத்த பாட்டுக்களின் பெருமுழக்கம் ஒரு புறம்!

எலிசபெத்து[1] என்னும் சீமாட்டி இங்கிலாந்தின் சிம்மாதனத்துத் தனித்து வீற்றிருந்து மெத்தெனவே பேசி, இனிய முகங்காட்டி, புன் சிரிப்பே சிரித்து, குடிமக்களனைவரின் மனத்தையும் கொள்ளை கொண்டு, ஆளும் திறமையில் அதற்கு முன்னும் பின்னும் இல்லாத விதமாய்ப் பலவாண்டுகள் அரசு புரிந்து வந்த நாளில், "இங்கிலாந்தின் அன்னாய், கல்வியையும் அறிவையும் செல்வத்தையும் பெருக்கிச் சிறியதொரு தீவுக்கு, நிலத்திலும் நீரிலும் நாற்புறத்திலும்

---

1. Queen Elizabeth

சீரும் சிறப்பும் வாய்க்கச் செய்த பெருமை நின்னதேயன்றோ! நீ வாழ்க! நின் பெயர் திகழ்க! நின் புகழ் பெருகுக!'' என்று குடி மக்கள் வாழ்த்துக் கூறும் பெருமுழக்கம் மற்றொரு புறம்!

**ஜோன்**[1] என்னும் வீர மங்கை, கையில் வாளேந்தி அசுவமீது ஆரோகணித்து, மனந் தளர்ந்து பயந்து நின்ற **பிரான்ஸ்** நாட்டினரைத் தட்டி எழுப்பி, வீர உணர்ச்சி ததும்பும் விதமாக, "தோழர்காள், பிரான்ஸ் நம் அனைவர்க்கும் தாயல்லவோ? தாய் பிணியுற்றாள்! பிணிக்கு மருந்து செய்ய வாருங்கள்! **தாய்க்குப் பணி செய்வது மக்களின் கடனல்லவோ!** பணி செய்ய இவ்வளவு தவக்கமேன்? நிமிர்ந்து நடவுங்கள்! பயப்படுவது வேண்டா! வெற்றி நமக்கே! தாயின் மணிக்கொடி பாரீர்!'' என்று பேசவும், பிரான்ஸ் நாட்டினர் அனைவரும் ஒருங்கு நின்று பெரும்போர் வென்று, பெரிய வெற்றிக்கொடி நாட்டி, ஜய பேரிகை கொட்டிய பெருமுழக்கம் ஒரு புறம்!

**மேரி கியூரி**[2] என்னும் மங்கையர்க்கரசி, பௌதிகத்திலும் இரசாயனத்திலும் நீண்ட சோதனைகளை நடத்திப் பெருநிகழ்ச்சிகளை

---

1. Joan of Arc, the Warrior Maid of France

2. Madam (Marie) Curie, twice winner of the Nobel Prize for Physics and Chemistry, an honour unique even in the history of Nobel Prizes.

விளைத்து, 'இரேடியம்' என்னும் ஒப்பிலாப் பொருளையும் தனித்தெடுத்து, அதற்காக இதுவரை வேறு எவருக்கும் வாய்க்காத வகையில் இரண்டு நோபெல் பரிசுகளைப் பெற்ற போது, உலகத்து விஞ்ஞானிகளெல்லாம் ஒரே மனத்துடன் கை கொட்டி ஆர்த்த பேராரவாரம் மற்றொரு புறம்!

இத்தனை அரவங்கள் தீண்டியும் கலையாக் கனவு ஒன்றே! இத்தனை பெருமுழக்கங்களையும் கேளாத் தூக்கமும் ஒன்றே! இந்நிலைக்கு உட்பட்டவரை எழுப்புவது எவருக்குக் கைகூடுவது! அவர்பொருட்டுத் துக்கிப்பதும் வீணே! ஆகவே, அவர்பொருட்டு நாம் துக்கிப்பதும் இனி இல்லையாம்.

இனி 'இருபதாம் நூற்றாண்டின் அவ்வை' என்று குறிக்கத் தக்க அம்மையார் இருவரைப் பற்றிக் கூறுவோம்: இவ்விருவருக்கும் தாயகமாய் விளங்கும் பெருமை அமெரிக்க ஐக்கிய நாட்டைச்[1] சேரும். இவர்களுள் ஒருவர் ஆக்னிஸ் ஸ்மெட்லி[2] ஆவர்; மற்றவர் பெர்ல் பக்கு ஆவர்.

ஆக்னிஸ் ஸ்மெட்லி அம்மையார் சீனத்தின் 500,000,000 மக்களுக்கும் ஈன்ற தாயினும் இனிய தாயராவர். சீனத்தவருக்குச் சென்ற இருபத்தைந்து வருஷங்களில் நேர்ந்த

---

1. U. S. A.

2. To Agnes Smedley and Pearl Buck, we owe almost all our intimate knowledge of Modern China and of its awakening.

பேராபத்துக்களிலெல்லாம் பக்கத்திருந்து புத்தொளியும், புத்துணர்ச்சியும், புத்துயிரும் கொடுத்துக் கை தூக்கிய பெருமை இம்மாது சிரோமணியையே சேரும்.

பெர்ல் பக்கு அம்மையாரும் சீனத்துக்கு மற்றொரு தாயராவர்!

"சீனத்தவரும் மக்கள்; மற்றவரைப்போன்ற மக்கள்; இரத்த நிறத்திலும் இதயத் துடிப்பிலும் சீனத்தவரும் ஏனையோரைப் போன்ற மக்களே; அடக்கத்திலும் அறிவுரைகளிலுமோ, சீனத்தவர் மற்றவரினும் மிக்கவர்,' என்னும் இவ்வுண்மைகளை மேனாட்டினருக்குப் பலகாலும் இடித்திடித்துரைத்த பெருமைக்கு இவ்வம்மையாரே உரியவராவர். அமெரிக்காவுக்குச் சீனத்தினிடம் நன்மதிப்பும் உள் நட்பும் சம நோக்கும் பிறக்க உதவி செய்தவை இவ்வம்மையார் எழுதிய நூல்களேயாகும்.*

இந்நூல்களைப் பேரிலக்கியமாகக்கருதி, இவருக்கு 1938ல் இலக்கியத்துக்கென்று நோபெல் பரிசு வழங்கியது, இவர் செய்துள்ள பெருந்தொண்டுக்குச் சிறிய கைம்மாறேயாம்.

மண்ணில் தோன்றிய ஒவ்வொரு மகவையும் தாமே கருவுற்று ஈன்றெடுத்து வளர்த்த மகவைப்போலக் கருதி, அதன்பால் அளவற்ற அன்பும் கருணையும் வைத்து, அதற்கென்று தம் வாழ்நாள் முழுதும் அர்ப்பணம் செய்யும்

* அனுபந்தம் பார்க்க.

பேரன்னையருக்கு உலகம் என்ன கொடுத்துத் தான் கடனைத் தீர்ப்பது! அவ்வை, ஆக்னீஸ் ஸ்மெட்லி, பெர்ல் பக்குப் போன்றவருக்கு நாம் பட்டுள்ள கடன் தீருவதும் உண்டோ!

* * *

இத்தனை புகழுக்குமுரிய பெர்ல்பக்கு அம்மையாரின் வாழ்க்கை வரலாறு தொடர்ந்ததாக ஆங்கிலத்திலும் இல்லை. ஆங்காங்குள்ள குறிப்புக்களை வைத்துக்கொண்டே நாம் இச்சரிதையை எழுதலானோம்.

கீழ்க்காணும் 'சுய சரிதை', இவ்வம்மையார் தமது வாழ்க்கையின் முதல் நாற்பது வருஷங்களை எவ்வாறு கழித்தனர் என்று கூறி வந்திருக்கும் ஒரு குறிப்பிலிருந்து தயாரிக்கப்பட்டதாகும்.[1]

## 1

"நான் பிறந்ததாகப் பிறர் சொல்லக்கேட்ட ஆண்டு 1892. என் ஜன்மபூமி என்று என் பெற்றோர் பெருமையுடன் கூறி வந்தது அமெரிக்காவை. ஆனால், நான் நெடுநாள் வசித்ததும், நன்கு அறிந்ததும், மதிப்பதும், காதலிப்பதுமான பூமி சீனமேயாகும்.

"சீனத்து மக்களும் மக்கள் என்பதையும், சீனத்துத் தோழர்களும் தோழர்கள் என்பதை

1. ஆக்னிஸ் ஸ்மெட்லியின் சுய சரிதையை அவர் எழுதியிருக்கும் '**சீனத்தின் வீர முழக்கம்**' ('Battle Hymn of China') என்னும் புத்தகத்திலேயே காணலாம்.

யும், சீனத்துப் பெண்களும் இனிய தோழிகள் என்பதையும் நான் அறிந்த அளவிற்குப் பிறரையும் அறியச்செய்வதே என் வாழ்க்கையின் முக்கியக் கடமைகக் கருதுகிறேன். [1]

"நான் பிறந்த சில நாளைக்கெல்லாம் என் பெற்றோர் சீனம் வந்தடைந்தனர். இரண்டு மாதமும் நிரம்பாத சிசுப்பிராயத்திலிருந்தே நான் சுவாசித்த காற்று, சீனத்தின் காற்றே. வயது பதினேழு வரை நான் கண்டு களித்த தோற்றங்களும் சீனத்தின் தோற்றங்களே. நான் கூடி விளையாடிய தோழரும் தோழியரும் சீனத்துச் சிறுவர் சிறுமியரேயாவர்.

"நாங்கள் இருந்த இடங்களில் வெள்ளையர்கள் பெரும்பாலும் இருப்பதே இல்லை. இதைக் குறித்துச் சிலர் என்னைத் துக்கம் விசாரிப்பதுண்டு! இவர் என்னையும், சீனத்தையும், மனித இயற்கையின் வேறுபாடற்ற தன்மையை

---

1. Every son of China feels grateful for the following kind and memorable words from an 'American':

"When I am asked what the Chinese are like, I do not know. They are not this or that people, but *people*. I cannot describe them any more than I can describe my own blood and skin. I am too near them and have shared too closely their lives.

"*I hate persons who make the Chinese strange and outlandish. I want to make them as real as they are to me, if I can.*

"My interest is in people and since I live among the Chinese, the Chinese people."—Pearl Buck

யும் கண்டவாறு என்னே! நிறம் வெண்மை என்னும் எண்ணம் இல்லாத எவனுக்கும் எவ ளுக்கும் சீனத்தில் தனிமை வந்துறுவதேன்? அந்நாட்டின் ஜனத் தொகை ஐயாயிர லட்சம் என்பது இவரது புத்திக்கெட்டாதது வேடிக் கையிலும் வேடிக்கை! சீனத்தில் நான் தனிமை யால் வாடினதாக எனக்கு ஞாபகமே இல்லை!

"என் பாலிய ஞாபகங்கள்! ஓ! அவை எவ்வளவு இனிமையானவை! இயற்கையிடமே நான் காலையில் கண் விழித்தேன்; விளையாடி னேன்; மாலையிற் சிரித்து ஓடியாடியதும் எங்கள் பெரிய இனிய தோட்டத்திலேதான்.

"ஓ! அந்நாளில் எனக்கு எத்தனை சுதந் திரம்! நான் எங்கும் சென்றேன்! எவருடனும் பேசினேன்! யாவற்றையும் கேட்டேன்! தடை, கட்டுப்பாடு, 'பெண்கட்டை' என்பதனுல் இளக் காரம் முதலியவைகளை நான் கேட்டிருக்கிறேன்! சிற்சில சமயம் கண்டுமிருக்கிறேன்! ஆனுல், அனுபவித்ததில்லை! என் பெற்றேர் காட்டு மிராண்டிகளல்லர்; அறிவும் நாகரிகமும் படைத் தவரேயாவர்! என்னை அன்புடனும் கௌரவத்துட னும் நடத்தியதற்காக அவர்களுக்கு என் வந்தனமும் வாழ்த்தும் உரியன.

"என் பெற்றேர்களில் என் தாயையே நான் பெரிதும் அறிவேன். என் தாயை என்னென் பேன்! அவளே என் உடனிருந்து விளையாடிய தோழி! அவளே இயற்கையின் வனப்பையும்,

இசையின் இன்பத்தையும், கலையின் பொலிவை யும் எனக்குக் காட்டிக்கொடுத்த நல்லாசான்.

"சலசலவென்றிசைத்தோடும் அருவிகள், காற்றிலசைந்தாடும் மரங்கள், கண்ணைக் கவரும் வண்ணப் பூக்கள், விண்ணிடையே வெள்ளெ ளப் பூத்த இனிய மேகங்கள் முதலிய எண் ணிறந்த தோற்றங்களைச் சுட்டிக்காட்டி அழகுத் தெய்வத்துக்கென்னை அறிமுகமாக்கி வைத்தவ ளும் அவளே.

"உணர்ச்சிகளை 'இவை, அவை' என்று பிரித்துச் சொல்லவும், கருத்துக்களைப் பிழை யறச் சொற்களில் அமைக்கவும் எனக்குக் கற் பித்தவளும் என் தாயே. பாஷை என்பது உள் ளக்கருத்தையும், புலன்களின் உணர்ச்சியையும் அறிவிக்க உதவும் ஒரு கருவியே என்னும் பேருண்மையை எனக்கு ஐந்து வயதிலேயே எளிய முறையில் அறிவுறுத்தியவள் என் அன்னையே.

"என் பதினேழாம் வயதிலிருந்து இருபத் திரண்டாம் வயது வரை (1909—1914) நான் அமெரிக்காவில் கழித்தேன். அப்போதுதான் என் கல்லூரிப்படிப்பு முடிந்தது.[1]

"அந்நாளைப்பற்றி நான் அதிகம் சொல்ல விரும்பவில்லை. நான் முதலில் அமெரிக்காவுக்குப் போன போது அஃது அயல் நாடாகவே எனக்

1. Pearl Buck graduated from Randolph-Macon College in Virginia (U. S. A.) in 1914.

குத் தோன்றிற்று. சீனத்தவரின் அடக்கத்துக்கும் பணிவுக்கும், அமைதிக்கும், அமெரிக்காவில் நான் கண்டவரின் மனப்பான்மைக்கும் பெருத்த வித்தியாசமிருப்பதாய்த் தென்பட்டது. இத்தனை நாளான பிறகும் அந்த நினைப்பு எனக்கு முற்றிலும் மாறிவிட்டது என்று சொல்லுவதற்கில்லை.

## 2

"எனக்கு முதல் மணம், ஜான் லாசிங்கு[1] என்பவருடன். விவாகமான போது எனக்கு வயது இருபத்திரண்டு.

"அதிலிருந்து ஐந்து வருஷங்களை நானும் அவருமாகச் சீனத்துக் கிராமங்களிலேயும், ஜன சஞ்சாரமில்லாத காடுகளின் நடுவேயும் கழித்தோம். அவ்வாழ்க்கையிலேதான் எத்தனை சம்பவங்கள்! எத்தனை அனுபவங்கள்!

"தினந்தோறும் திடுக்கிடத் தக்கதாய சம்பவம் ஏதாவதொன்று நேரும்! அந்தப் பக்கங்களில் கொள்ளைக் கூட்டத்தினர் அதிகம். அவர்களுக்கும் சுற்றுப் பக்கங்களில் உள்ள கிராமத்தினருக்கும் ஓயாச்சண்டை நடக்கும்! 'டமால்! டமால்!' என்று குண்டு வீச்சு, குத்து, கொலை, இரண்டு நாளைக்குச் சமாதானங்கூட!

"ஒரு நாட்டுக்குரிய மக்கள், கிராமத்திலுறைபவர்களேயாவார்கள். சீனத்து மக்கள் யாவர் என்பதையும், சீனத்தின் பெருமையும்

1. John Lossing, later Professor of Sociology and Economics in the University of Nanking.

பழமையும் யாவை என்பதையும் நான் கண்டறிந்தது அந்நாளிலேதான்.

“பெண்ணுக்குப் பெண் என்ற முறையிலும், தோழிக்குத் தோழி என்ற வகையிலும், கல்லூரிப்படிப்பும் பட்டமும் சுதந்திரமும் படைத்த அமெரிக்க மாது என்ற முறையிலுமாகச் சீனத்துப் பெண்களின் மன நிலைமையை நான் நன்கு அறிந்ததும் அந்நாளிலேதான். அவருள் ஒவ்வொருவர் என்னிடம் கூறியுள்ளதைப் பிறர் அறிந்தால், ‘சீனப் பெண்களுக்கு அடிமையிலேதான் மோகம்,’ என்னும் எண்ணம் அடியோடு மடிவதாகும். ஆணுக்குள்ள உரிமைகளும், அறிவைப் பெருக்கும் சாதனங்களும், தொண்டு புரியும் வசதிகளும் தங்களுக்கும் இல்லையே என்று அவர்கள் உள்ளங் கொதிப்பது எனக்கல்லவோ தெரியும்!

3

“1921ல் நானும் என் கணவருமாக நாங் கிங்கு[1] வந்து சேர்ந்தோம். என் கணவரைப் போலவே எனக்கும் அந்நகரக் கல்லூரியில் போதகாசிரியர் வேலை கிடைத்தது. அக்கலா சாலையில் பத்து வருஷம் நான் இலக்கியம் போதித்து வந்தேன்.[2]

“நான் வேலையில்லாத ஓய்வு நேரத்தைக் கூத்திலும் களியாட்டங்களிலும் நாகரிக வாழ்க்கை

1. Nanking

2. Between the years 1921 and 1931, Pearl Buck lectured on Literature in the University of Nanking.

யிலும் கழித்ததாக எண்ண வேண்டா. அத்த கைய வாழ்க்கை எனக்குப் பிடிப்பதே இல்லை.

"அவ்வருஷங்களில் நான் பார்க்கவும், கேட் கவும், படித்தறியவும், ஊகித்துணரவும் தகுதி யானவை எத்தனையோ இருந்தன.

"அப்போதுதான் சீனத்திற்குக் கண் விழிப்பு நேர்ந்தது! எத்தனையோ நூற்றாண்டுக ளாகப் பெருந்தூக்கத்திலிருந்த சீனம், பெருத்த கொட்டாவிவிட்டுக் கொண்டு கண்ணைக் கசக்கிக் கையையும் ஊன்றிக்கொண்டு படுக்கையினின் றும் எழுந்தது அந்நாளிலேதான்! 500,000,000 மக்கள் அடங்கிய தேசத்தின் கண் விழிப்பு, காட் சியிலும் காட்சி! அதன் மாட்சியே மாட்சி!

"அக்காலத்திலேதான் சீனத்திற்குப் போதை மயக்கத்தினின்றும் தெளிவு ஏற்பட்டது! அந்த மயக்கத்தை என்னென்பது! இயந்திரப் பெருக்கு, விஞ்ஞான வளர்ச்சி, வியாபாரத்தில் ஊக்கம் என் னும் இவற்றையெல்லாம் பெருத்த தொல்லைக ளாகவே நினைத்த மதி மயக்கம் அதுவாகும்!

"அம்மயக்கத்தைத் தெளிய வைக்கத்தான் எத்தனை கசப்பான மருந்து! நாட்டில் பஞ்சம்! சீனத்துப் பஞ்சங்களைப் போன்ற பஞ்சங்களை வேறெங்குக் காண முடியும்? நாடெங்கும் வறுமை! கொடிய வறுமை! ஓயாப்பிணி! மனிதப் பயிரைப் பதராக்கிய ஓயாப்பிணிகள்! உள்ளூர் மருந்து போதாதென்று, வெளியூர்ப் புட்டி மருந்துகளும் ஊசி குத்துதலும்! மேனாட்டாரின் இரணச்

சிகிச்சைகள்! புதுப்பணச் செருக்குற்ற ஜப்பானின் இளக்காரமும் அரட்டலும்!

"சீனம் வியாதியினாலும் வியாதியினுங் கொடிய விஷமருந்துகளாலும் தவித்துக்கொண்டிருந்த போது, கூடவிருந்து பிணியாளனுக்குப் பணிவிடை செய்தவரே சுன்-யாட்-சென்[1] ஆவர்."

"ஒன்றுபட்டாலன்றிச் சீனத்திற்கு வாழ்வில்லை,' என்றும், 'மேல் நாட்டவரைப் போல விஞ்ஞானத்தை வளர்த்து இயந்திரம் பெருக்கினாலன்றிச் சீனத்திற்கு முன்னணியில் இடமில்லை,' என்றும் அறிவித்த மகாத்துமா சுன்-யாட்-சென்னே ஆவர்.

"அவரது மொழியைச் செவியிலேற்று மயக்கமெல்லாம் தெளிந்து, அதுவரைப் பழமைக்கே மண்டியிட்ட சீனம், நினைப்பிலும் சொல்லிலும் செயலிலும் புத்தம்புதுமையாக மாறப் பெருமுயற்சி செய்ய ஆரம்பித்ததும் அந்நாளிலேதான். அக்காட்சியே நான் என் வாழ்விற் கண்ட காட்சிகளுளெல்லாம் தலையானதாகும்."

4

இவ்வம்மையாரின் 'சுய சரிதை'க்கு ஆதாரமாயிருந்த குறிப்பு, 1932-ஆம் ஆண்டுடன் முடிவதாகும். அதற்குப் பிறகே இவர் வாழ்க்கை

1. Sun-Yat-Sen, Father of Modern China.

யில் குறிப்பதற்கான அத்தனை சம்பவங்களும் நேரிட்டன.[1]

இவர் உயிரினும் இனியதாய் மதித்துவரும் சீனத்தை ஜப்பான் ஆக்கிரமித்துக் குண்டு வீச, இவர் தாம் காதலித்த அந்நாட்டைத் துறந்து உயிருக்குத் தப்பியோடி, அமெரிக்காவை அடைந்ததும் அதற்குப் பிறகுதான்.

ஜான் லாசிங்கு என்பவருடன் ஏற்பட்ட விவாகத்தை இரத்துச் செய்துவிட்டு ரிச்சர்டு ஜே. வால்ஷ்[2] என்பவரை இவர் புனர் விவாகம் செய்துகொண்டதும் அதற்குப் பிறகுதான் (1935). [வால்ஷ் என்பவர், இவ்வம்மையார் 1931ல் 'நல்ல நிலம்'[3] என்ற புத்தகத்தைப் பிரசுரித்த போது அறிமுகமானவராவர்.]

'சீனத்தின் உயிரோவியமோ!' என்னுமாறு அமைந்த அப்புத்தகத்திற்காக இவருக்கு நோபெல் பரிசு வழங்கப்பெற்றதும் இப்பகுதியிலேதான்.

---

1. இவற்றை ஓரிடத்திலேயே காண்பதற்கில்லை. எங்கெங்கிருந்தோ சிறிது சிறிதாக அறிந்தவைகளே இனி வரும் பகுதிக்கு ஆதாரமாகும்.

2. Richard J. Walsh, of John Day Company, U. S. A.

3. 'Good Earth': the first great work by Pearl Buck, published first in 1931 and for which she was awarded the Nobel Prize for Literature in 1938. It attained fame later even as a film.

சமீப நாளில் இவ்வம்மையாரின் பேரன்பும் கருணை நினைப்பும் முன்னிலும் மேலோங்கி நிற்கின்றன. இவ்வம்மையாரின் பார்வை சீனத்துடன் நில்லாமல், அடிமைப்பட்ட நாடுகள் அத்தனையிடையும் பரவ ஆரம்பித்திருக்கிறது. '**ஆளுக்கு ஆள் அடிமையாவது ஒழிய வேண்டும்,**' என்பதை இவர் பலகாலும் வற்புறுத்தி வருகிறார்.

இரண்டாவது மகா யுத்தம் ஆரம்பித்ததிலிருந்து, '**இனி யுத்தமே வாராதபடி தடுக்கும் வழி யாது?**' என்று தூக்கம் பிடியாமல் வழி தேடியலையும் பெருமக்களுள் இவரும் ஒருவராவர். அத்துறையில் இவருக்கு உடனாய் நிற்பவர்கள் **அயின்ஸ்டீன், லின் உடாங்கு,**[1] **ஜான் கந்தர்**[2], **ஜவஹர்லால் நேரு, ரொமேன் ரோலந்து**[3] **அப்டன் சிங்கிளேர்**[4] என்னும் உலகத்துப் பிரதான மக்களாவர்.

* * *

'ஆண், பெண் என்னும் இரு பாலார்க்கும் **வீட்டுப்பணி** என்பதுடன் **நாட்டுப்பணி** என்பதும் உண்டு,' என்று **ஜான் ரஸ்கின்**[5] ஓரிடத்தில் சொல்லியிருக்கிறார். இவ்விரண்டு பணிகளையும் தம் வாழ்நாளில் செவ்வனே செய்தவர் மிகச் சிலரே. அவர்களுள் பெர்ல் பக்கு அம்மையாரும் ஒருவராவது பெருமையினும் பெருமையே!

இவ்வம்மையாருக்கு முப்பது வயதுவரை **வீட்டுப்பணி!** முப்பதிலிருந்து ஐம்பது வரை

---

1. Lin Yutang
2. John Gunther
3. Romain Roland
4. Upton Sinclair
5. John Ruskin in '*Sesame and Lilies*'

சீனத்திற்குப் பணி! ஐம்பதிற்குப் பிறகோ, உலக முழுவதிற்குமாகப் பெரும்பணி! இவர் இளமையைத்தான் என்னென்பது! பெருநோக்கமும் தொண்டு செய்வதில் பேரார்வமும் உளவேல் அறுபதும் இருபதே என்பதற்கு இவ்வம்மையாரே போதுமான சான்ருவர்.

இவர் ஒருவர் வாழ்க்கையில் அடையத் தக்க பேரனுபவங்கள் அத்தனையும் படிப்படியாக முயன்று அடைந்து அனுபவித்தவராவர். 'தாய்' என்னும் அனுபவம் இவருக்கு இரு முறை ஏற்பட்டது.

'மனைவி' என்னும் அனுபவமும் இவருக்கு இருமுறை ஏற்பட்டது சிலருக்குப் பொருந்தாததாகத் தோன்றலாம். ஆனால், ஆங்காங்குள்ள பழக்க வழக்கங்களில் இடத்திற்கு இடம் உள்ள பெரு வேற்றுமைகளை உணர்ந்தவருக்குப் புனர் விவாகத்தில் பொருந்தாததாக எதுவும் தோன்ருது.

மேனுடுகளில் தோழமையே விவாகத்திற்கு அடிப்படை; சமத்துவமே விவாகத்திற்கு ஆதாரம். கருத்திசையாத ஆண் பெண் இருவர், நாயும் பூனையுமாய் அமைந்து, இல்லற இன்பங்களனைத்தையும் இழந்தவராய் வெறு வாழ்வு வாழ்வதைக் காட்டிலும் அத்தகைய விவாகத்தை இரத்துச் செய்தல் உசிதமென்றே கருதப்படுகிறது. ஒரு பூமியில் செழிக்காத பயிரை வேறு பூமியில் வைத்துப் பயிரிடுவதில் தவறில்லை என்பதை அறிந்த மேனுட்டாருக்கு, வேண்டும்போது

விவாக இரத்துச் செய்வதிலும், புனர் விவாகம் செய்துகொள்வதிலும் ஆட்சேபமிருப்பதில்லை. ஆகவே, அவர் முறைப்படி இவ்வம்மையார் புனர் விவாகம் செய்ததில் பொருந்தாதது ஏதும் இல்லை.

இப்பெரியாரின் எண்ணிறந்த பெரும் பண்புகளில் மிகவும் போற்றத்தக்கது ஒன்று உண்டு: அஃது இவரது சமநோக்கு.

தாம் பிறந்த நாடும், பேசும் பாஷை யும், பின்பற்றும் நாகரிகமும் வேருய் இருந் தும், பிற தேசத்தவரேயான சீனரிடம் இவருக் குள்ள பரிவும் அன்பும் எத்தனை சிறப்பிற்கும் உரியனவாம்.

சீனத்தைப்பற்றிப் புத்தகம் எழுதுவதற் கென்று இவர் அந்நாட்டில் வசித்தகாலம் சுமார் 40 வருஷம்! இவர் அந்நாட்டைப்பற்றி அந் நாட்டு மொழியிலேயே வாசித்த காலமோ, 20 வருஷம்!

அயல் நாட்டாரை ஐந்தே நாளில் 'முற்றி லும் அறிந்து' ஆரும் நாள் அவரைப்பற்றிய புத்தகமெழுதி முடிக்கும் பெரியார்களுடன் இவ் வம்மையாரை ஒப்பிட்டால், 'இவருக்கு ஒரு நோபெல் பரிசு போதும்,' என்று சொல்லுபவர் யார்!

* * *

நமக்கொரு கனவு வாய்த்தது! என்னே அதன் விந்தை!

அக்காட்சியில் ஆண், தந்தை; பெண், தாய்! ஆண், தோழன்; பெண், தோழி! ஆண், கசட

றக் கற்ற பண்டிதன்; பெண், மாசறத் தேர்ந்த மேதை! ஆண் கலைவாணன்; பெண் ஓவியக் காரி! ஆணுக்கும் வீட்டுப்பணி; பெண்ணுக்கும் நாட்டுப்பணி! ஆணும் விஞ்ஞானி; பெண்ணும் விஞ்ஞானி! **ஆணுக்கும் உரிமை; பெண்ணுக்கும் சம உரிமை!**

அந்தக் கனவிலிருந்து நாம் விழித்தெழுந்த போது, அக்காட்சிக்குக் காரணமாய் நின்றவர் அவ்வைப்பெருமாட்டியா அல்லது ஆக்னீஸ் ஸ்மெட்லி அம்மையாரா அல்லது பெர்ல்பக்கு அம்மையாரா என்னும் சந்தேகம் நமக்குத் தீர்வ தாகவே இல்லை!



# 5

# ரொமேன் ரோலந்து[1]

[' இருபதாம் நூற்றாண்டின் புத்தர்கள் ' என்று சொல்லக்கூடியவர்களுள் ரொமேன் ரோலந்தும் ஒருவர். பூமி என்பது இவருக்கு ஒரு வீடு. உலக மக்கள் யாவரும் அவ்வீட்டிலுறைபவர்கள். இவர்களுள் ஒவ்வொருவரும் காலத் தெய்வத்தின் மக்களே. ஆதலின், உலகில் பிறந்த ஒவ்வொருவருக்கும் உடன் பிறந்தார் ஒருவர் இருவரல்லர், அவர் 2000,000,000 பேர்; என்று இப்படியே பேசி, இப்படியே எழுதி, இப்படியே உள்ளூற நினைத்தும் வந்த ஒப்பற்ற சமதரிசியே ரொமேன் ரோலந்து.]

உலக மக்களுள் ஒரு சிலருக்குக் கருத்தும் சொல்லும் செயலும் ஆகிய யாவும் சுயநலமே. இவர்கள் உலகில் இன்புற்று வாழ வேண்டும் என்று நினைப்பதும் தங்களைத்தானும். இவருக்கு நன்மை பயப்பதாயும் இன்பமளிப்பதாயுமுள்ள எதுவும் இவரது மனச்சாட்சிக்குச் சரியே. அது கொலை களவு பிறருக்கு ஹிம்சை என்பவற்றின் மூலமாக விளைவதாயினும் சரி; அதையும் இவரது மனச்சாட்சி சரியே என்னும்.*

---

1. Romain Rolland (1866—1944)

* The Sadists and all cases of Anti-social instinct and behaviour.

இத்தகையார் மிகச் சிலரே. இவரைத் தீய வர் என்றும் கயவர் என்றும் சொல்லிச் சிறுமைப் படுத்தும் எண்ணம் நமக்கில்லை. பெரும்பாலும் இவர் குற்றமெல்லாம் அறியாமையே. உலகத் தில் உள்ள எஞ்சிய மக்கள் 200 கோடிப் பேர்கள் என்பதும், சுயநலமே பெரிதென்று வாழ வேண் டுமானுல் மனிதக் கூட்டத்தில் பிறவாது பிற விலங்கினங்களிலேதான் பிறந்திருக்க வேண்டு மென்பதும் அறியாதவரை ஏசித்தான் என்ன பயன்!

மற்றும் சிலருக்குத் 'தாம்' என்னும் பதம் முன்னிலும் கருத்து விரிந்ததாகும். அதனுள் மனைவி, மக்கள், பெற்ருேர், நண்பர், உற்ருர், உறவினர், ஊரார் என்னும் அனைவரும் அடங்கு வர். வாஞ்சை, நட்பு, பிரியம் என்பவற்றையெல் லாம் இவர் ஓரளவாக அறிந்தவரே எனினும், இவருக்கு ஜாதி, மதம், பாஷை, தேசம், அனுஷ் டானம் என்னும் இவைகளால் ஏற்படும் பிரிவினை பெரிதே. இப்பிரிவினைகள் மட்டுமே அல்லாமல், மனிதனுக்குத் தனியாய் அமைந்தது என்று இவர் நம்பிவரும் மனச்சாட்சியும்,* பிற விலங்கு களைப்போல மனிதன் தனித்து வாழாமல் கூட்

---

* The chapter on "Moral sense" in the '*Descent of Man*' by Darwin traces the origin of Conscience in Man to his social instincts, to his craving for love and sympathy from the other members in the community, and especially to his fear of their disapprobation and his well-developed sense of the commonweal. That chapter deserves closer study even by those to whom Darwin is no stranger.

டங் கூட்டமாய்க் * கூடி வாழ்வதனுலேயே ஏற்படுவது என்பது பேரறிஞர்கள் கருத்தாகும்.

இவ்வுண்மையை அறியாது, ஜாதி, மதம், தேசம், பாஷை, மரபு என்னும் பிரிவினைகளைப் பிரமாதமாக நினைத்ததனுல் விளைந்தனவே, இதுவரை சரித்திரத்திலும் வாழ்க்கையிலுமாக நாம் அறிந்துள்ள வாக்கு வாதங்கள், மனஸ்தாபங்கள், சச்சரவுகள், விரோதங்கள், சண்டைகள், போர்கள், பெரு யுத்தங்கள் என்னும் யாவும். இனி நேரவிருக்கும் மிகப் பெரிய யுத்தங்களுக்குக் காரணமாக இருப்பனவும் ஜாதி, மதம், தேசம் என்னும் வேற்றுமைகளேயாம்.

இத்தகைய மதி மயக்கங்களுக்கும் சிறு வேற்றுமைகளுக்கும் அடிமைப்படாதவர் மிகச் சிலரே. இவரே 'மனிதர் யாவரும் ஓரினம்; ஒரு குலம்; பூமி என்னும் ஒரு தாய் வயிற்று மக்கள்,' என்னும் உண்மையை அறிந்தவராவர். **புத்தர், இயேசு நாதர், முகம்மது நபி, ஆதி சங்கரர், இராமானுசர், மத்துவர், சைவசமயக் குரவர் நால்வர், ராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகானந்தர், காந்தி அடிகள்** என்பவரெல்லாம் இத்தகையினரே. ரொமேன் ரோலந்து இத்தகைய சமதரிசிகள் நிறைந்த சங்கத்தைச் சேர்ந்தவராவர்.

புத்தரை மத ஸ்தாபனத்திற்காகவே மனித உருவெடுத்து வந்த அவதார புருஷர் என்று வாதாடுபவரிடம் நமக்கு வழக்கில்லை. அவர்கள் புத்தரை அறிந்தது அவ்வாறு! புத்தரது சமதரி

* Community life

சனமும், மிக விரிந்த நோக்கமும், உயிர்களிடத்து அன்பினால் கனிந்த உள்ளமும் அவருக்குச் செய்யும் பெருமையையே ஈடற்றதாக நாம் கருதுகிறோம்.

'இருபதாம் நூற்றாண்டில் புத்தர் சிலர் உளர். அவர்களுள் ரொமேன் ரோலந்து ஒருவர்' என்று கூறுவது முற்றிலும் சரியே.

*     *     *

ரொமேன் ரோலந்து அவதரித்த ஊர் கிளாமஸி[1] என்பது. இது பிரான்ஸ் நாட்டில் உள்ளது. இவர் பிறந்த காலத்தில் தேவர்கள் மலர் மாரி பெய்ததாகவாவது, கந்தருவர்கள் வீணைகானம் செய்ததாகவாவது இன்னும் வதந்தி கிளம்பவில்லை. 'குவா குவா' என்று கத்தும் குழந்தையாகவேதான் இவர் பிறந்ததாகத் தெரிகிறது.

இவரை நாம் புத்தர் என்றதனால், எப்போதும் இவருக்குச் சுருங்கிய புருவமும் ஞானோதயத்துக்காக மரத்தடியில் உட்காரும் வழக்கமும் இருக்கும் என்று நினைக்க வேண்டா. இவர் தினந்தோறும் மூன்றுவேளை வயிறார உண்பவரே; மனம் விரும்பிய ஆடையை வாங்கி உடுப்பவரே; சன்னியாசிக்குரிய சின்னம் ஏதும் இவர் வீட்டிலும் இல்லையாம்.

ஒன்றையும் கற்றறியாமல், தியானத்தினாலேயே இவர் ஞானம் பெற்றதாகவும் பேச்சு இல்லை. இவர் முறையே எழுத்துப் பயின்று,

1. Clamecy

பள்ளி புகுந்து, கலாசாலையில் படித்து, பல வருஷங்கள் முயன்று தேர்ந்து, வெகுவாகக் கற்றே கடைசியில் சிந்தனு சக்தியையும் கற்பனு சக்தியையும் பெற்றவராவர்.

துறவி என்பதனுல், இவருக்குத் தொழிலில்லை என்று கருத வேண்டா. இவர் நெடுநாள் வரை கலாசாலைப் பண்டிதர்; பின்பு தீவிரமாகவும் தெளிவாகவும் வரிந்து வரிந்து எழுதும் பேரெழுத்தாளர்.

மற்ருென்று: செல்வத்தையும் குடும்பத்தையும் இவர் நிராகரித்தவரல்லர். நோபெல் பரிசாக 1915ல் 8000 பவுன் இவருக்கு வழங்கப்பட்ட போது, இவர் அதை நிராகரித்ததாகத் தெரியவில்லை. இவர் இனிய பெண்ணொருத்திக்குக் கணவருமாவர்.

முக்கியமான ஒன்று: அவதார புருஷர் என்பதனுல், இவர் அற்புதங்களைத் தோற்றுவித்ததாகவும் வதந்தி இதுவரையிலும் இல்லை. செம்பைப் பொன்னுக்குவதோ, இறந்தவரைப் பிழைக்கச் செய்வதோ ரொமேன் ரோலந்து அவர்களுக்கு என்றும் கைவசமாகாத வித்தையேயாகும்.

"சமாதானத்தையும் சகோதர புத்தியையும் மனித உள்ளத்தில் ஊறச் செய்யும் சக்தி என்

னிடமில்லையே! எழுதியெழுதி என்ன பயன்!"* என்றே இவர் கூறுகிறார்.

"என்னசார்! இதுகூடச் செய்யத்தெரியாத ஆசாமியைப் புத்தர் என்று சொல்லி ஏமாற்றப் பார்க்கிறீர்களே! இவரது சரித்திரத்தைச் சரியாக நீங்கள் படிக்கவில்லைபோல இருக்கிறது! மனிதனைப் பிழைக்கச் செய்யாமற் போனாலும், ஏதாவது நாயையாவது பிழைக்கச் செய்திருப்பார்! இன்னுமொரு முறை இவர் சரித்திரத்தைச் சோதித்துப் பாருங்கள்!" என்கிறார் ஒரு பக்தர்.

இந்தத் தொல்லைக்குத்தான் நாம் என்ன செய்வது! எங்கெங்கோ தேடியும், எத்தனையோ புரட்டியும், ரோலந்து அவர்கள் உடைந்த முட்டையினையும் ஒன்று சேர்க்கும் உபாயம் கற்கவில்லை என்பதே நாமறிந்ததாகும்! ஒரு வேளை நாம் சோதித்த காலம் குறைவாயிருக்கலாம்! இன்னும் ஓராயிர வருடத்திற்குப் பிறகு புதிய அத்தாட்சிகள் தோன்றுவதும் கூடும்!

அப்படி இருந்தும் ரோலந்து அவர்களை இருபதாம் நூற்றாண்டின் புத்தர் என்று கூறி வாதாடுவதை நாம் விடுவதாயில்லை. இப்படி வாதாடுவதில் நமக்குப் பற்றுண்டு என்று பிறர் சொல்லுவதாயினும் சரி, ரோலந்து அவர்களை மும்மலம்

* இவர் எழுதிய நூல்கள் முப்பதுக்கு மேலாம்; வரைந்துள்ள கட்டுரைகளுக்கோ, கணக்கே இல்லை. சுமார் 15000 பக்கங்கள் என்பது ஏறக்குறையச் சரியாயிருக்கும். (அனுபந்தம் பார்க்க.)

முருக்கிய முனிவர் என்றும், மிகப் பெரிய துறவி என்றும் கூறியே தீருவோம்.

ஏனென்னில், துறவி என்னும் பதத்திற்குத் தேசப்பற்று, மதப்பற்று, ஜாதிப்பற்று, பாஷைப் பற்று,'தான்' என்னும் தீராப்பற்று என்ற அனைத்தையும் துறந்தவர் என்பது பொருளானால், ரோலந்து அவர்கள் துறவியே. உலகப் பெரும்பணி செய்வதற்காக மேற்கூறிய சிறிய பற்றுக்களனைத்தையும் இவர் அறவே களைந்த துறவியாவர்.

'ஓ! அப்படியா! இவருக்கு ஞானோபதேசம் செய்தவர் யாரோ!' என்கிறார் இன்னுமொரு பக்தர். இவருக்குக் குருமார் ஒருவர் இருவர் அல்லர். விஞ்ஞான சாஸ்திரங்கள் உரைக்கும் ஒவ்வோர் உண்மையையும் இவர் குருவாகவே ஏற்றவராவர்.

மணிக்கு 500 மைல் வேகம் செல்லும் ஆகாய விமானம் இவருக்கு ஒரு குரு! பூமி மிகச் சிறியது என்னும் உண்மையை இவருக்கு அறிவித்த குருவும் அதுவே. 'இரண்டு நாளைக்குள் சுற்றி முடித்துவிடத்தகுந்த ஒரு சிறிய பந்தை பிரமாண்டமானதாக மதித்துத் தேசம் தேசமாய் வகுத்து, ஒன்றாய பொருளைக் கூறு செய்யாதே,' என்று உபதேசம் செய்த ஞானகுருவும் அதுவே!

மணிக்கு 670,000,000 மைல் வேகம் செல்லும் மின்சார சக்தி இவருக்கு மற்றொரு குருவாம். 'கண்ணை மூடித் திறப்பதற்குள் பூமி

யின் ஓரிடத்தில் நிகழும் சமாசாரங்களை வேண்டு மானால் மின்சார அலைகள்[1] மற்ற எவ்விடத்திற்கும் அறிவிக்கும் நாள், இந்நாள்! இரேடியோ, டெலிவிஷன்[2] என்பவை ஒரு விநாடி முடிவதற்குள்ளாக, உலகம் முழுதும் கேட்கும் செவிகளாகவும் பார்க்கும் கண்களாகவும் விளங்கும் நாளும் நம் நாளாயிருக்க, 'கிழக்கு—மேற்கு, வடக்கு—தெற்கு என்றெல்லாம் பிரித்துப் பிரிவினை செய்யாதே,' என்றுரைத்த பரம குருவும் மின்சார சக்தியேயாம்.

இத்தகைய குருமார்களிடம் ஞானம் பெற்றவருக்குப் பேசக் கற்றுக்கொடுக்கவும் வேண்டுமா? ரொமேன் ரோலந்து நமக்கு எடுத்துச் சொல்லும் ஞானோபதேசங்களில் ஒன்றைக் கேளுங்கள் :

*"ஒருவன் தன்னையும் தனது தாய் நாட்டையும் காமுறுதல் இயற்கையே. சுயநலப் பற்றும் முரட்டுத் தேசீய உணர்ச்சியும், ஒன்றும் அறியப்படாத முன் நாளில் தேவையாயிருந்திருக்கலாம். ஆனால் சிறிது சிறிதாகச் சுயநலத்திலிருந்து

---

1. Electromagnetic waves
2. Television

* "Love of oneself and of one's people is a natural sentiment. But it is a primitive sentiment, which ought to evolve, **through subordinating itself**, to the love of common humanity as a whole. *The very interest of each nation demands it. For the time has come when no nation can dispense with the comity of all nations.*"

தியாக புத்தியும், தேசீய உணர்ச்சியிலிருந்து பூலோக சாம்ராஜ்யத்திலுள்ள மக்கள் அனைவரும் ஒன்றே என்னும் சமதரிசனமும் பிறக்க வேண்டும். சுயநலத்தைக் கருதியாவது, சமதரிசனம் வேண்டும்! ஏனெனில், உலகநிலை முன்போல இல்லை. பிரிவினை நோக்கமும், 'வெவ்வேறு' என்ற எண்ணமும் இனி நீக்க வேண்டுவனவே.''

இப்படிச் சொல்லியதற்காக இவருக்குக் கிடைத்த சன்மானம் என்ன தெரியுமா? சன்மானம், துறவறமே! பிரான்ஸ் நாடு இவரைத் 'தாய்நாட்டின்மீது அன்பில்லாத பாவி!' என்றது. பிற தேசங்களும் இவரைத் 'தேசப்பற்றில்லாதவன்' என்றன! அந்நாள் முதல் இவர் சுயநாட்டைத் துறந்தவரே; சுதேச உணர்ச்சியையும் துறந்தவரேயாவர்.

மதப்பற்றும் இவருக்கு இல்லை. இராமகிருஷ்ண பரமஹம்ஸரை இவர் 'என் குருவே' என்றவர். இவருக்கு விவேகானந்தர் அர்ச். பாலேயாவர்[1]. மதச்சின்னங்களையும் மதத்தினரின் பழக்கவழக்க சம்பிரதாயங்களையும் 'மதம்' என்பது இவரிடம் இல்லை.

இவருக்கு உற்றாரும் உறவினரும் உலகப் பணி செய்பவரே. பொது நோக்கம், விரிந்த உள்ளம்,

---

1. He refers to Ramakrishna as 'one of the greatest mystics of all time,' and as 'the Indian Francis of Assissi' and refers to Vivekananda as 'the St. Paul of India."

உலகம் முழுவதையும் கவ்வியதாய அறிவு என்னும் இவை மூன்றும் இல்லாத எவரும் இவருக்கு விரோதியேயாவர்.

இவரது நோக்கமோ, மிக விரிந்ததாகும். அஃது இடத்திற்கும் காலத்திற்கும் அதிகாரத் திற்கும் ஆணவத்திற்கும் அடங்குவதாயில்லை.[1]

* * *

இவரது வாழ்க்கையை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்:

## 1

முதலாவதாகச் சொல்லக்கூடிய பகுதி 48 வயது முடியும் வரை[2] உள்ளதாம். இதை மயில், குயில், இனிய வண்டினங்கள், அழகிய கலைமான்கள் முதலியவை ஆடிப்பாடிக் கொஞ்சிக்குலவிக் களிக்கும் இனிய பூஞ்சோலையில், நெஞ்சினை அள்ளும் மாலை நேரம் என்னலாம்.

---

1. " Never go to sleep. Never compromise. Never come to terms with injustice or falsehood. Push aside one by one all the old gods, to make room for new ones.

" Dare! Sacrifice yourselves. And rest assured that your sufferings will not be in vain. *You toil for the centuries to come.* You must not complain that you are not nearing the end.

" Be glad that you have a task that infinitely exceeds the duration of a mere life time. That is a method of experiencing Immortality."

——From '*I will not rest.*'

2. 1866—1914

**பீதோவன்,**[1] **ஹாண்டெல்**[2] முதலிய சாகித்திய கர்த்தாக்களின் ஈடற்ற சங்கீதச் சுவையிலும், **மைக்கேல் ஆஞ்செலோ,**[3] **லியனார்டோ டா வின்ஸி**[4] முதலிய சிற்ப விற்பன்னர்களின் கலை அமைப்பிலும், **வால்டேர்,**[5] **மாலியர்**[6] முதலிய ஆசிரியர்களின் இலக்கியச் சுவையிலும் இவர் மனம் நிலைத்தது. அழகுத் தெய்வத்தை இவர் காதலித்து மணம் புரிந்து ஈன்றெடுத்த சிசுக்கள் பல[7]. அவைகளுள் **ஜீன் கிறிஸ்டாபே**[8] என்பது ஒரு சங்கீத வித்துவானின் வாழ்க்கைச் சரிதமாம். அது தனிப்புகழுக்கு உரித்தாவதாகும்.

கலை, இசை, சிற்பம், நாடகம், இலக்கியம் முதலியவற்றுக்கு இவர் செய்துள்ள தொண்டு பெருந்தொண்டாம். அதற்காகவே இவருக்கு நோபெல் பரிசு கிடைத்தது. அந்நூல்களைப் படிக்கும்போதெல்லாம், **இரவி வர்மர், தியாகய்யர், புரந்தரர், வீணை தனம்மாள், அப்துல் கரீம்கான்** முதலியவர்களுக்கும், இத்தகைய கலைவாணரால் வரலாறு எழுதப்படும் பாக்கியம் இன்னும் வாய்க்கவில்லையே என்று நாம் பலகாலும் வருந்தினதுண்டு. மேலும் கூறிற் பெருகும். ஆகவே, இனிய சோலையின் காட்சியை இத்துடன் நிறுத்துவோம்.

---

1. Beethoven
2. Handel
3. Michelangelo
4. Leonardo da Vinci
5. Voltaire
6. Moliere
7. **அனுபந்தம் பார்க்க.**
8. *Jean Christophe*

## 2

இரண்டாவதாக உள்ள இவரது வாழ்க்கைப் பகுதிக்குப்[1] பொருத்தமானவையாக உச்சி வேளையையும், நள்ளிரவையுமே சொல்லலாம்.

அதுவரையில் கலைவாணியின் அழகிலீடுபட்டு இன்ப மயக்கத்திலிருந்தவரை முதல் மகாயுத்தம் திடுக்கிட்டு விழிக்கச் செய்தது.

அந்த யுத்தத்தில் நடந்த ஒவ்வொன்றையும் இவர் அறியலானார். ஜயிப்பதற்கு வேண்டி ஒவ்வொரு கட்சியினரும் செய்யும் பொய்ப் பிரசாரங்களையும் எதிரியிடம் கற்பிக்கும் துவேஷ புத்தியையும் இவர் வெளிப்படையாகக் கண்டித்து எழுதலானார்.

இவர் எழுதியதுதான் தாமதம்! உடனே யுத்தத்தில் கலந்த அத்தனை தேசங்களும் யுத்தத்தையும் நிறுத்திவிட்டு, இவர்மீது பாய்ந்தன!

அந்நாள் முழுதும் இவருக்குத் தேசப்பிரஷ்டம்; தாய் நாட்டின் தூஷணை; அயல் நாட்டாராலும் வாதனை; பலகாலும் சரி என்று நம்பி வந்த எண்ணங்களின் முறிவு; நம்பிக்கையிலும் தள்ளாட்டம்.

'நள்ளிரவில் ஒருவரும் இல்லாத காலத்து, நண்டுத்தெறுக்காலொன்று கொட்டிவிட்டது போல' என்று சொல்லியிருந்தால், ஆரம்பத்தில் சொன்ன உதாரணம் முற்றிலும் பொருந்துவதாயிருந்திருக்கும். தினம் இந்த விதமாக வைத்தியமுமில்லாமல், ஐந்து வருஷங்கள் கழிந்தன!

---

1. 1914—1919

3

மூன்ருவது பருவம் என்பது, 1919லிருந்து ஆரம்பிப்பதாகும்.

இதற்கு உதாரணமாக உதயகாலத்து இரவியைச் சொல்லலாம். ஆனுல், இரவிக்குள்ள ஒரு சிறுமை ரொமேன் ரோலந்து அவர்களுக்கு இல்லை. கிழக்குக்கும் மேற்குக்கும் ஒரே காலத்தில் ஒளி கொடுக்கும் பெருமை கதிரவனுக்கு ஏது? ரோலந்து அவர்களோ, கிழக்கிலும் மேற்கிலும் பூமிமுழுவதிலும் ஒரேகாலத்தில் அறிவின் ஒளியையும், கதகதவென்ற இன்பக் கனலையும் வீசும் இளங்கதிரவனுவர்.

அறிவுச்சுடரும் இன்பக்கனலும் வீச ஆரம்பித்தும், ஆடவரும் மகளிரும் இன்னும் துயில் நீங்கிஞரில்லை.

சிலருக்கு இப்போதுதான் மிகவும் இனிப்பதாய காலைத்தூக்கம்! சிலரது கொட்டாவி, 'கர் கர்' என்று பெருத்த ஓசை செய்கிறது!

சிலருக்குக் கூந்தலில் கலைவு! ஆடையிலும் அலங்கோலம்! வாயிலும் வயிற்றிலும் முந்தை நாளைய கழிவுப்பொருள்கள்!

மக்களின் கண் விழியாமை கண்டும் இரவி ஒளி பரப்புவதையும் வெப்பம் வீசுவதையும் நிறுத்துவதில்லை. நாள் முழுதும் தூக்கத்தில் கழிப்பது மக்களுக்கு இயற்கையன்று என்பது அவன் அறியாததா என்ன?

உலக மக்கள் படுக்கையை வெறுக்கும் காலமும், கண் விழிக்கும் காலமும், மலம் கழிக்கும் காலமும், பல் துலக்கும் காலமும், முகம் கை கால் கழுவும் காலமும், அன்றைக்கும் வருநாளைக்குமாகச் சிற்றுணவருந்தும் காலமும் வெகு சீக்கிரமாக வர இருப்பதை அவன் அறிவான். ஆகவே, மக்களிடம் அவனுக்குப் பரிவும் அன்புமே தவிர, வெறுப்போ கோபமோ இல்லை!

உருவகத்தை வளர்த்துவானேன்! ரொமேன் ரோலந்து அவர்களுக்கு உலக மக்களிடத்து உள்ள காதலும், உலகப்பணி செய்வதில் உள்ள ஆர்வமும், உலகின்புறுவதில் உள்ள இன்பமும் கட்டுக்கடங்காதனவாம்.

* * *

நமது நாட்டு இளையவர்க்கும் முதியவர்க்கும் ரொமேன் ரோலந்து அவர்களிடமிருந்து நாம் சுட்டிக்காட்டிப் பலகாலும் வற்புறுத்த விரும்பிய பண்புகள் இரண்டு:

அவைகளுள் முதலாவது, ரோலந்து அவர்களின் எல்லையில்லா இளமை உணர்ச்சியும், மூப்பும் முறிவும் முடிவும் இல்லா உள்ளக் கிளர்ச்சியும் ஆகும். நமது நாட்டவருக்கு ரோலந்து அவர்களின் இளமையில் ஒரு சிறிதும் இல்லை என்பது இழுக்காகாது. அவரைப் போல நொடிநொடியும் அறிவோம்புபவரையும், இனியும் கற்றறியப் போதுண்டு என்று நம்புபவரையும் காண்பதரிது.

'பதினாறில் இளமை; இருபதில் கலாசாலையில் அறிவின் முதிர்ச்சி; இருபத்திரண்டில் கலியாணமானதும் அறிவுக்கு அதிர்ச்சி; இருபத்து நாலில் வேலையில்லாத் திண்டாட்டத்தால் அறிவின் முதுமை; இருபத்தாறில் குடும்பத்தாலும் வேலை நெருக்கடியாலும் அறிவின் தள்ளாட்டம்; இருபத்தெட்டில் முதுகாட்டு நினைப்பும் வேதாந்தமும்; முப்பதில் அறிவின் அடக்கமும் அஸ்தமனமும்; அதற்குப் பிறகு ஆயுள் முழுவதும் அறிவுக்குப் பாசறையில் இருட்டடைப்பு,' என்னும் கொடுவிதியை நாம் கல்லூரிப் போதகாசிரியராயிருந்து[1] பல முறை கண்டு மனம் நொந்ததுண்டு. 'ஐம்பதிலும் அறிவுக்கு ஆட்டமில்லை; அறுபதிலும் அறிவுக்குச் செறிவே' என்னும் நம்பிக்கை நம் நாட்டவருக்கும் வாய்க்கும் நாள் எந்நாளோ!

ரோலந்து அவர்களுக்கோ, அவரது 48-ஆம் வயது வரை கலை வாணியையும், இசை மங்கையையும், ஓவியக் கன்னியையும் காதல் செய்வதற்கென்று இளமை! அதன் பிறகும் உலகப்பணி செய்வதற்கென்று முன்னிலும் இளமை! என்னே இவர் இளமை இருந்தவாறு!

48க்குப் பிறகு 47, 46, 45 என்று வயது வழிவழியே சிறுத்துக் கடைசியில் இவருக்கு வயது என்றும் இருபத்தைந்தாய் நின்றதை இனியாயினும் அனைவரும் அறிவாராக! இவரது இளமை உணர்ச்சியையும் உள்ளக் கிளர்ச்சி

1. College Lecturer

யையும் பின் வரும் வாக்கியம் நமக்கு நன்கு தோற்றுவிப்பதாகும் :

"நான் எழுதி வந்திருப்பதெல்லாம் அறிவு விரிவடைந்துகொண்டிருப்பவருக்கே; மற்ற வருக்கன்று. அறிவென்னும் ஒளியை நான் தாழாது தூண்டியே வந்திருக்கிறேன்; என்னுயுள் முடியும் வரையில் அறிவு தளிர்ப்பதையே நான் விரும்புவேன். அறிவின் வளர்ச்சியும் முன்னேற் றமும் முடிவடைந்து நின்றுவிட்டால், வாழ்க்கை யில் சுவைப்பதற்கு இனிதாயது வேறு என்ன உண்டு !"[1]

நாம் கூற வந்ததாய மற்றொன்று, இவரது விசால நோக்கமாம். அஃது உலக முழுவதையும் கவ்வி அடைத்து நிற்கும் நோக்கமாகும்.

இவரது பரந்த நோக்கத்தில் புத்தர், இயேசு நாதர், சங்கரர், இராமானுசர், மத்துவர், தமிழ் நாட்டு நால்வர், ஏனைய மதாசாரியர் அனைவரும் ஒரு மதத்தவரே ! இவர்கள் சமதரிசனம் என்ற தாய் காலத் தெய்வத்தினிடம் பெற்ற அரும் புதல்வர்களேயாவார்கள்.

யூதர், ஆரியர், பார்ப்பனர், பறையர், குறவர், மறவர் என்னும் பல ஜாதியினரும் இவர் கருத் துப்படி ஒரு ஜாதியினரேயாவர்.

---

1. "*I have always written for those who are on the move.* I have always been on the move myself and I never hope to stop as long as I live. Life will be nothing to me if it is not movement, straight ahead." —From "*I will not rest.*"

இந்தியர், வெள்ளையர், கறுப்பர், நீகிரோக்கள், மங்கோலியர்கள் என்னும் யாவரும் இவரது கொள்கைப்படி ஒரு குலத்தைச் சேர்ந்தவரே யாவர். ஒரு தாய் வயிற்று மக்களாதலால் இவர்களனைவருக்கும் குலமும் கோத்திரமும் ஒன்றே!

* * *

ரொமேன் ரோலந்து போன்ற பெரியார்கள் எடுத்துரைத்த பேருரைகளை இனியாவது நமது செவி மடுப்பதாக! சமதரிசனம் என்னும் பேரொளியைப் பெற்று இனியாயினும் நம் கண்கள் குருடு நீங்குவனவாக! '**உலக மக்கள் யாவரும் ஓரினம்; ஒரு குலம்; ஒரு தாய் வயிற்று மக்களே,**' என்னும் உணர்ச்சி எங்கும் பரவி உலக முழுதும் இன்பமும் சமரஸமும் பெருநட்பும் பெருகுவனவாக!

கல்வியும், செல்வமும், குன்று இளமையும், **பெரிதினும் பெரிதாய விரிந்த நோக்கமும் உலகத்து மக்கள் 2000,000,000 பேர்களுள் ஒவ்வொருவருக்கும், ஒவ்வொரு நாளும் உரியவாகுக!**

# 6

# கார்ல் ஹைன்றிஷ் மார்க்ஸ்[1]

*[வாழ்க்கை என்பது ஒரு விசித்திரமான விடுகதை. இவ்விடுகதைக்குப் பொருள் பலவாம். ஒவ்வொருவருக்கும் இதன் பொருள் அவரவரது அறிவுக்கும் சிந்தனைக்கும் தக்கவாறேயாம். அரசியல், பொருள் நூல், சரித்திரம், சட்டம் முதலிய பலவற்றையும் கற்ற கார்ல் மார்க்ஸ் விடுகதையை விடுத்த விதம் புதுமையிலும் புதுமை! சொத்துச் சேருவது எப்படி என்றும், சரித்திரமாவது என்ன என்றும் இவர் எடுத்துக்காட்டிய உண்மைகள் பேருண்மைகளாம்.]*

பரீட்சையில் சில வினாக்கள் வாய்த்துவிடுவதுண்டு. முதலில் பார்க்கும் போது வினாவுக்கு விடை மிக எளிது போலத் தோன்றும். ஆனால், எழுத ஆரம்பித்த பின்னரே விடை அத்தனை எளிதன்று என்பது புலப்படும். சுமார் அரை மணி நேரம் தத்தித்தடுமாறியபின், வினாவிலுள்ள சிக்கல்களும் சூக்குமங்களும், முட்டையிலிருந்து பொரியும் மீன் குஞ்சுகளைப் போல ஒன்றன்பின் ஒன்றாய் வெளிக்கிளம்பும்! அதுவரை எழுதியது அவ்வளவுமோ வினாவுக்கு விடையன்று என்பது எழுதியவருக்கே தெரியவரும். பரீட்சகர் விடையை எவ்வாறு கொள்வார் என்பதைக் கேட்கவும் வேண்டுமோ!

---

1. Karl Heinrich Marx (1818—1883)

மேற்சொன்னவர் நிலைமையே நமது நிலைமையும்! "கார்ல் மார்க்ஸ் என்பவர் செய்த புதுமை யாது? இவருக்குப் புகழ் ஏற்பட்டது எதனால்?" என்பவை, தோற்றத்தளவு சுலபமான கேள்விகளே.

ஆனால், இவற்றுக்கு விடை எழுதுவதோ, தொல்லையிலும் தொல்லை!

நமது தயக்கத்தைக் கண்டு சிலர், "ஓகோ! இது கண்ணில்லாதவனைச் செந்தாமரைக் கண்ணனென்று பாராட்ட வேண்டிய இடம்போல இருக்கிறது! அதற்காகவே ஆசிரியர் தவிக்கின்றார்!" என்று முடிவு செய்துவிடலாம்.

அது சரியாகாது. ஏனெனில், ஆசிரியருக்குத் தவிப்புக் கற்பனைக்காக அன்று. கற்பனை செய்து மார்க்ஸ் அவர்களுக்குப் புகழ் நன்கொடை செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் இல்லை. இவர் விளைத்தது புதுமை அன்று என்றும் இவருக்கு உரித்தாவது பெரிதினும் பெரிதாய புகழ் அன்று என்றும் எவரும் வாதாட முடியாது.

இன்றைய இரஷிய நாட்டை அறிந்தவருக்குக் கார்ல் மார்க்ஸ் அவர்களின் பெருமையையும், அவர் கொள்கைகள் விளைத்த புதுமையையும் பற்றி அதிகமாக உரைக்க வேண்டுவதில்லை. அறிவிலும், கல்வியிலும், பயிர் வளத்திலும், பொருட்செல்வத்திலும், வாழ்க்கை இன்பத்திலும் இந்நாள் இரஷியா சிறந்து காணப்படுகிறது. இத்தகைய வைபவம் அதற்குப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இல்லை. மாஸ்கோ

விலிருந்து நெப்போலியனைப் பின்வாங்கச் செய்தவை சார்[1] அரசனது படை வலியுமன்று; அவனது சேனையின் வீரமுமன்று; குடி மக்களின் தேசபக்தியுமன்று; 'பின் எவை?' எனில், மாரி காலத்துக் கொடும்பனியும், பனிக்கட்டிகளுமே யாம்! 'அவ்வாறு இருந்த நாடொன்றை இவ்வாறாகச் செய்தது எது?' என்று ஆராயத்தலைப்பட்டவருக்கு மார்க்ஸ் அவர்களின் பெருமை தெள்ளென விளங்குவதாகும்.

'இவருக்குப் பெருமையும் புகழும் இத்தனை இருப்ப, இவற்றை விவரிப்பதில் தொல்லையேன்?' என்னலாம். விவரிப்பதில் தொல்லை இல்லாமல் இல்லை. எதைமட்டும் விவரிப்பது, எவற்றையெல்லாம் விடுவது என்பதுதான் நமக்குத் தொல்லை! இவர் வாழ்நாளில் விளைத்த பெருநிகழ்ச்சிகளை விவரிப்பதா, அல்லது இவர் இறந்து சில நாளைக்குப்பின் இவருக்கு வாய்த்த புகழை விவரிப்பதா, அல்லது இன்னும் ஒரு நூற்றாண்டுக்குப் பின் இவருக்கு ஏற்பட இருக்கும் தனித்தலைமையை விவரிப்பதா என்று தேரமுடியாமையே நமக்குத் தவிப்பு!

ஆகவே, பரீட்சகருக்கு ஒரு விண்ணப்பம்: வினவுக்கு விடை மிகப் பெரிதாகையால், முழு விடையையும் இங்கு எதிர் பார்க்க வேண்டா; விடையில் ஆற்றொழுக்கத்தையும் எதிர்பார்த்தல் வேண்டா. ஏனெனில் விடைக்கு உரியவர் எழுதிய ஏடுகளத்தனையும் ஆற்றை எதிர்த்துச் செல்லும்

1. Tsar

ஏடுகளே; வழக்கமாகப் புகழ் வழங்கும் முறையை யும் நம்மிடம் எதிர்பார்த்தல் வேண்டா; ஏனெ னில், இவருக்கு வாய்த்த பெருமைகள் ஒன்றிரண் டல்ல. ஆகவே, வாய்த்த பெருமைகள் எவை என்பதை விடுத்து, வாய்க்காத சிறுமைகள் எவை என்பதைக் கூறுதலே எளிதாம்.

* * *

கார்ல் மார்க்ஸ் அவர்களை அறிமுகமாக்கு வதும், 'இவர் பிறந்து இருந்து இறந்தது எங்கே? வாழ்ந்தது எவ்வாறு?' என்பவற்றை உணர்த்துவ தும் எவர் விடையினும் ஒரு பகுதியாம். நாம ளிப்பதாக வந்த விடையில் அது பின்வருமாறு :

அதோ பாருங்கள், ஆஜானுபாகுவாய் நிற் பவர்தாம் **கார்ல் மார்க்ஸ்.**

முகத்தை அடைத்து நிற்பது இவர் தாடி! பளபளவென்று ஜொலிப்பவை இவர் கண்கள்! உயர்ந்து விசாலமாய் இலங்குவது இவர் நெற்றி!

இவர் நெஞ்சில் உரமும் கருத்தில் அழுத்த மும் சிந்தையில் வைராக்கியமும் வாய்ந்தவர் என் பதை இவரது அடர்ந்த புருவமும் விரிந்த மார் பும் பருத்துத் திரண்ட தோள்களும் குறுகி இறுகிய கழுத்தும் அறிவிக்கும். எஞ்சியுள்ள சந் தேகங்களோ, இவர் வாய் திறக்கும் போதும் எழுதப் பேனாவைக் கையில் எடுக்கும் போதும் சரேலென மறையும்.

இவர் பிறந்த இடம் ஜெர்மனி. இருந்த இடமோ, ஐரோப்பா முழுவதும். அமைதியுடன் வாழ்ந்து இறந்த இடமே இங்கிலாந்து.

வாழ்நாள் முழுவதும் இவருக்கு வறுமை, சிறுமை, கொடுமை; சிறுமை, கொடுமை, வறுமை; கொடுமை, வறுமை, சிறுமை!

இளமையும் கல்வியும் இவருக்கு ஜெர்மனியில். சட்டம்[1] சரித்திரம்[2] தத்துவ ஞானம்[3] என்பவை எல்லாம் இவருக்குப் பொருளானவையே.

உள்ள நாள் முழுதும் இவர் பணி ஏற்றதும் செய்ததும் பத்திரிகைத் தொழிலே. இவர் பிரசுரித்த ஒவ்வொரு பத்திரிகையும் உடனே அல்லது சில நாளிலோ பறிமுதலே செய்யப்பட்டதாம். பயிர் தழைப்பதும் அதைப் பிறர் கிள்ளுவதும், கனி பழுப்பதும் அதைப் பிறர் கொய்வதுமான வேடிக்கை சுமார் 40 வருஷ காலம் ஓயாமல் நடந்து வந்தது.

இவருக்கு விரோதமான அரசாங்கம் முதலில் ஜெர்மனி; பிறகு பிரான்ஸ்; பிறகு உலகமெல்லாம்! ஒவ்வொருவருடனும் இவருக்கு எதிர்ப்பே! இவர் ஒருவரை எதிர்க்கப் பிறர் அனைவரும்!

பான்[4], பெர்லின்[5], பாரிஸ்[6], புரூசேல்ஸ்[7], இலண்டன்[8] என்பவை இவர் வாழ்க்கைப் போர் நடத்திய யுத்தகளங்களுள் சிலவாம்.

---

1. Law
2. History
3. Philosophy
4. Bonn
5. Berlin
6. Paris
7. Brussels
8. London

வீட்டிலோ வறுமை, இல்லாமை, ஏழைமை! பிணி, நோய், வியாதி! கடனோ, எப்போதும், எவரிடமும், கிடைக்கும்போதெல்லாம்! நண்பர்களிடமும் இவருக்குக் கடனே!

இத்தனைக்குமிடையில் இவருக்குப் படிப்பு, யோசனை, எழுத்து, **பிரிட்டிஷ் மியூஸியத்தில்**[1] சுமார் முப்பது வருஷங்களுக்கு ஓயாத படிப்பு! **ஹாம்ப்ஸ்டெட் ஹீத்து**[2] என்னும் இடத்தில் உலவும்போதும் இவருக்கு யோசனையே!

ஸோகோவில்[3] அமைந்த எளிய விடுதியில் இவர் தங்கும் நேரங்களிலும் எழுத்தே! அதற்கு முன் உள்ள கொள்கைகளை எல்லாம் எதிர்த்து எழுத்து! காலமென்னும் பேராற்று வெள்ளத்தை எதிர்த்து நீந்திச் சமாளிக்கும் அழியாத எழுத்து!

**'பிராவ்'**[4] என்று இவர் காதல் ததும்ப அழைத்த மனைவியின் முழுப்பெயர் **ஜென்னி பான் வெஸ்ட்பேலன்**[5] என்பது. **கஸ்தூரிபாய் காந்தி** என்னும் பெயருக்கு வடநாட்டிலும், **லோக சுந்தரி இராமன்**[6] என்னும் பெயருக்குத் தென்னாட்டிலும், **சீதை** என்னும் பதத்திற்கு இராமாயணத்திலும், **கண்ணகி** என்னும் சொல்லுக்குச் சிலப்பதிகாரத்திலும் என்ன பொருளுண்டோ, அப்பொருளையே இப்பெயர் ஜெர்மன் பாஷையில் உணர்த்துவதாகும்.

---

1. British Museum
2. Hampstead Heath
3. Quarters in Dean St., Soho, London
4. Frau
5. Jenny von Westphalen
6. Lady Raman

மார்க்ஸ் அவர்களது உள்ளமோ, மிகப் பெரியதானவொரு நீர்வீழ்ச்சி! அவரது மனத்தின் வேகமோ, சண்டமாருதம்! அடியோடு பெயர்த்துப் புரட்டி உருட்டித் தகர்த்தெறிய அவர் நினைத்ததோ, பெருத்தவொரு கற்பாறை! வேருடன் அவர் பிடுங்கி எறிய எண்ணியதோ, வருஷக் கணக்காய் உருண்டு திரண்டு உயர்ந்து பரந்து முதிர்ந்து தடித்துப் பருத்துத் தழைத்து, விழுதூன்றி உரமும் ஏறப்பெற்ற நெடியதோர் ஆலமரமாம்!

* * *

வாழ்க்கை என்பது விநோதமான விடுகதையே! இது சாதாரணமாக நாமறிந்த விடுகதைகளுள் ஒன்றன்று. சாதாரணமாக விடுகதைக்குப் பொருள் ஒன்றே. ஆனால், வாழ்க்கை என்னும் விடுகதைக்குப் பேசுபவர் எத்தனை பேரோ, அத்தனை பொருள்கள்!

'இவ்விடுகதைக்குக் குறிக்கத் தக்க சிலர், பொருள் பிரித்ததெவ்வாறு? மார்க்ஸ் அவர்கள் பொருள் பிரித்ததெவ்வாறு?' என்றுணர்த்துவது நமது விடையின் மற்றொரு பகுதியாம். அதன் நான்கு அங்கங்கள் பின் வருவன:

## 1

**கம்பர், காளிதாசர், ஷேக்ஸ்பியர்,[1] இப்சன்[2]** முதலிய நாடகாசிரியர்களுக்கு வாழ்க்கை என்பது பேராச்சரியத்தை விளக்கும் ஓர் அற்புதக் காட்சியேயாகும். இவரது நோக்கத்தின்படி

1. Shakespeare 2. Ibsen

உலக மக்களுள் ஒவ்வொருவருக்கும் எதுவோ ஒரு தொழில், எதற்காகவோ ஒரு கவலை, எஃது இல்லாமலோ ஒரு குறை!

உள்ளவரைப் பார்த்து இல்லாதவருக்கு ஏக்கம்! ஒவ்வொருவரும் சில உள்ளவரே; ஒவ்வொருவரும் பல இல்லாதவரே!

'இந்த வேடிக்கையையும் வைபவத்தையும் என்னவென்று உணர்த்துவோம்!' என்று கூறி நாடகாசிரியர்கள் பேச்சிலும் தடுமாற்றமுற்று, எழுதுகோலைக் கையிலெடுக்கிறார்கள்.

அவர்களது உணர்ச்சியை அறிவிக்கும் விதமாகப் பின் வரும் வாழ்க்கைச் சித்திரிப்பை அமைக்கலாமோம்:

கண்ணெதிரே காண்பது வானத்தையளாவிய மாளிகை. மாளிகை வாயிலிலே எளியவரையும் ஏற்பவரையும் விரட்ட என்று உருவிய வாளுடன் நிற்பவன் சிப்பாய். இவனுக்கு முப்பது நாள் சேவகத்துக்கு ஊதியம், ரூபாயில் பத்து; உடையில் வருஷத்துக்கு இரண்டு.

மாளிகையைச் சுற்றிலுமுள்ளது இனிய தோட்டம். மல்லிகைக்கும் முல்லைக்கும் அரளிக்கும் ரோஜாவுக்கும் நடுவே நிற்பவன் தோட்டக்காரன். இவனது ஆடை கந்தை. இவனது கையிலும் உடலிலும் சேறு. இவன் பாய்ச்சுவது நீர். செடிகளை வைப்பதும் வளர்ப்பதும் பிறர் விருப்பப்படி வளர்ப்பதும் பிடுங்குவதுமே இவனது தொழில். இரண்டு வருஷத்திற்கு ஒருமுறை இவ

னுக்கொரு மகவாம். மனைவியையும் ஏழெட்டுக் குழந்தைகளையும் காப்பாற்ற இவனுக்கு மாதச் சம்பளமோ ரூபாய் எட்டு. இவனது இருப்பிடம் மாளிகைக்குப் பின் மறைவாய் ஒதுங்கியமைந் துள்ள குடிசை. குடிசைமுன் கவிழ்த்திருப்பவை இவன் கூழைப் பசித்துக் குடிக்க மட்பாண் டங்கள். காண்பதற்குக் குடிசையில் வேறொன் றும் இல்லையாதலால், மாளிகைக்குள் செல்லு வோம் வாருங்கள்.

இங்கும் அங்கும் உலவிக்கொண்டிருப்பவர் தாம் பிரபு. பிரபு என்பதற்கு அறிகுறியாவன, உயர்ந்த உடை, அதிகாரப் பேச்சு, கம்பீரமான பார்வை. அவருக்குப் பின்னால் அடங்கி, ஒடுங்கி, நடுங்கி நிற்பவன் குமாஸ்தா. அவன் கலாசாலைப் பட்டம் பெற்றவனே. சம்பளமோ, அவனுக்குக் குமாஸ்தாவுக்கு வழக்கமாய் உள்ளதில் ரூபாய் ஒன்று அதிகம்.

உட்புறத்தில் சோபாவில் நிலை தரிக்காமல் அல்லாடுபவரே சீமாட்டியார். காதில் வைரம், கழுத்தில் முத்து, விரலில் பச்சை, அரையில் பட்டாடை என்பவை இவருக்குரிய அடையா ளங்களாம்.

சீமாட்டியார் பக்கத்தில் திறந்தபடி கிடப் பது நவீனம். இவர் சிற்சில சமயங்களில் அடக்க முயல்வன: காலையில் கொட்டாவியும் பகலில் தூக்கமுமாம்.

சீமாட்டியாருக்கு எதிரில் நிற்பவள், சமை யற்காரி. அவள் உடையைப்பற்றிச் சீமாட்டியா

ருக்கே கவலை இல்லாதபோது, நமக்குக் கவலை பிறப்பது எவ்வாறு!

இவர்களுள் ஒவ்வொருவரும் துன்பத்தை அறிந்தவரே என்பது நாடகாசிரியரது கூற்று.

பிரபுவுக்கோ, கவலைக்கு மேல் கவலை! அவருக்கு உடைமையாயுள்ள ஆலைகளில் வேலை நிறுத்தம்; நிலங்களில் வெள்ளாமைக் குறைவு; வாடகை வசூலில் தவக்கம்!

"வசூலில் தவக்கமும் தகராறும் இல்லாதிருந்தது என்றைக்கு! அதுவும் போதாதென்று வரி உயர்வு! இப்படி வரி உயர்ந்துகொண்டே போனால், கடைசியாய்த் தேறுவதுதான் எது! வரியாகச் சொத்தையெல்லாம் பறிகொடுத்துப் பிச்சையா ஏற்பது!

"சே! என்ன துன்பம் பிச்சைக்காரர்களால்! இவருக்கு எத்தனை வியாதிகள்! அத்தனைக்கும் இவர் தப்பிப் பிழைத்திருப்பதெப்படி!

"பசியின் வாட்டம் என்கிறார்களே! அப்படியொன்றுண்டா? பசி வாட்டுமா!

"ஆ, ஞாபகம் வருகிறது! பசி அதிகரிப்புக்காகவும் ஜீரண சக்திக்காகவும் இலேகியம் சாப்பிடும் காலம் வந்துவிட்டது!"

பிரபுவைப்போலத் தோட்டக்காரனுக்கு அத்தனை கவலைகள் இல்லை. அவனுக்குக் கவலைகள் இரண்டே:

"ஏழெட்டுப் புள்ளிங்களாச்சே!" மாதம் எட்டு ரூபாயில் தானும் அவர்களும் உணவாக

உண்பது எதை என்பது அவன் கவலைகளில் ஒன்று. "தீவுளி வருதே!" உடுக்க உடையைக் கடனாக அளிக்கும் கடை எது என்பது, மற்றொன்று.

*　　*　　*

சீமாட்டியாருக்குள்ள குறைகளோ, அனந்தம்.

"நவீனங்களில் போதிய சம்பவங்கள் இருப்பதில்லை. புடைவையிலும் புதுத்தினுசு இல்லை. எனவே பொழுது போக்கும், இனிமையாய் நடப்பதில்லை. ஆ! இந்தப் பாழும் கொட்டாவி!

"ஓ! எதிரில் நிற்பவள் சமையற்காரியோ! இவள் பார்ப்பதற்கு வெகுளிதான்! உள்ளுக்குள் இருப்பவை பழகுபவர்க்கல்லவோ தெரியும்! சீ! என்ன தொல்லையப்பா இந்த வேலைக்காரர்களுடன்! இவர்களை ஏழை என்று இரங்குவதற்குமில்லை. இவர்களிடம் எத்தனை சூது, வாது, கபடு, திருட்டு, பொய், புனைசுருட்டு! என்ன அற்ப புத்தி, எவ்வளவு கெட்ட எண்ணம்! போதும் போதும் அனுபவங்கள்!

"என்ன! இன்னும் மணி ஆறாகவில்லையா? அடுத்த நாள் விருந்துக்கு என்ன திட்டம் செய்வது என்பது புரியவேயில்லை! சரி, பொழுது போவதற்குச் சினிமாவாவது போய் வரலாம்!

"சினிமா போய் வருவதும் நல்ல யோசனை தான். அங்குப்போனால் நல்ல யோசனைகள் தோன்றக்கூடும்."

சமையற்காரியின் குறைகள் இரண்டொன்றே. வயது பதினெட்டிலிருந்து அவள்

கைம்பெண். படிப்பதாகச் சொல்லும் தன் பெண்ணைப் படிக்க வைப்பதற்குக் கையில் பண மில்லாததே அவளுக்குப் பெருங்குறை.

தனக்கு நேர்ந்த கதி தன் பெண்ணுக்கும் நேராதிருக்க வேண்டுவதானால், பெண் நன்ருய்ப் படிக்கவேண்டும். படித்த பெண்களுக்கே தக்க கணவர் கிடைப்பர். படித்த பெண்ணுக்கு வரதட் சிணை வேண்டுவதில்லை என்று வேறே வதந்தி. ஆனால், படிப்பதற்குப் பணம் வேண்டுமே! குஞ்சு பொரிக்க முட்டை வேண்டுமே! முட்டையிடக் கோழி வேண்டுமே! கோழி தோன்ற முட்டை ——சே! எல்லாம் ஒரே வட்டம், சுழற்சி!

"உடல் நோவு தாங்கவேயில்லை! கண்ணில் நீர் வடிந்துகொண்டே யிருக்கிறது!....ரஜாக் கிடைக் குமா? அடுத்த நாள் விருந்து என்னும்போது கூலி கொடுப்பவர்கள் ஓய்வு கொடுப்பார்களா! கஷ்டம் விடிவதெல்லாம் சிலருக்குக் கட்டை யிலேதான்!"

* * *

மேற்சொன்ன விதமாய், வாழ்க்கையை இந்திரநீலமும் கிளிப்பச்சையும் பவளச்சிவப்பும் சங்கின் வெளுப்பும் கறுப்பும் மஞ்சளும் ஊதா வும் சாம்பலும் கலந்த ஒரு வானவில்லாக உணர்த்துவது நாடகாசிரியரின் இயலாகக் காண் கின்றது.

அவர் கருத்துப்படி வாழ்க்கை என்பது அழுகையும் சிரிப்பும்; கோபமும் சாந்தமும்; ஏக்கமும் களிப்பும்; ஏற்றமும் தாழ்மையும்;

சிறுமையும் பெருமையும்; செல்வரும் வறியவ ரும்; சிறியவரும் பெரியவரும்; கெட்டவரும் நல்லவரும்—என்று பல வகையினரும் பல நிலை களும் பல குணங்களுமாகச் சேர்ந்து கலந்த ஒரு காட்சியாகும்.

மணிமுடி தரித்த மன்னனும் மண்ணேடேந் தும் ஆண்டியும், மாளிகையில் வாழும் பிரபுவும் அவருக்குக் குற்றேவல் புரியும் காலாளும், ஆலை முதலாளியும் அவரிடம் அன்றூடம் கூலிக்குக் கையேந்தும் தொழிலாளிகளும், பட்டாடையே உடுத்தும் சீமாட்டிகளும் அவர்களிடம் பணி விடைக்கு நிற்கும் தாதியர்களும்—ஆகிய இவர் ஒவ்வொருவருக்கும் நிலைத்த இன்பமோ துன்பமோ இல்லை என்பதே ஷேக்ஸ்பியர் போன்ற நாடகாசிரியர்கள் வாழ்க்கையில் எடுத் துக்காட்ட விரும்புவதாகும்.

## 2

ஆனால், ஷேக்ஸ்பியருக்கும் ஆதி சங்கரருக் கும் புதிர் விடுவிப்பதில் வித்தியாசம் உண்டு. ஷேக்ஸ்பியர் அறிந்தபடி வாழ்க்கையில் பொருந்துவதும் பொருந்தாததுமாக ஏதும் இல்லை. நீலமும் வனப்பு; மஞ்சளும் அழகே; அவர் கருத்துப்படி, கறுப்புக்கும் எழிலே!

சங்கரர் நோக்கத்திலோ, கறுப்புக்கு எழி லில்லை. கண்ணையருவும் மஞ்சளுக்கு அழகில்லை. எங்கும் மலிந்து காணும் துக்கம், உள்ளம் ஒப்பு வதாக இல்லை. அது வாழ்க்கைக்குச் சிறிதும்

பொருந்துவதில்லையாம். அது கடவுளின் கருணையை உணர்த்துவதுமில்லையாம்.

தாயிழந்த மக்கள், தந்தையற்ற சிறுவர்கள், புதல்வரில்லாச் செல்வர்கள், நாதனற்ற கைம் பெண்கள், காதலித்தறியா மனைவிகள், காதலி யைப்பறிகொடுத்த காதலர்கள், பொருளிருந்தும் புகழில்லாதவர், புகழிருந்தும் பொருளில்லாதவர், இவை இரண்டையுமே அறியாத கோடானு கோடி மக்கள், பிணியாளர், எளியவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள், அடிமைப்பட்டவர்கள், ஏமாறினவர்கள், ஏமாற்றப்பட்டவர்கள்—என்ற இவரை எல்லாம் வாழ்க்கையென்னும் காட்சிக் குப் பெருமை அளிப்பவராகக் கற்பிப்பது எவ்வாறு பொருந்தும்? துக்க தேவதையின் கோரத் தாண்டவத்தை ஆனந்தத் திருநடனம் என்பது எப்படி?

சச்சிதானந்த வள்ளல் படைத்த உலகத்தில் இத்தனை துக்கம் ஏன்? ஏன் இத்தனை துக்கம் இங்கு? துக்கம் இத்தனை ஏன் உலகத்தில்?

உலகம் என்பது உண்மையா, பொய்த் தோற்றமா? வாழ்க்கை என்பது கனவா, நனவா? துக்கம் என்பது மெய்யா, மாயையா?— என்று இவ்வாறெல்லாம் யோசனை செய்து, கடைசியாகத் துக்கம் என்பது மாயையே என்று முடிவு செய்தார் சங்கரர்.

சங்கரரைப் போன்ற அறிஞர் இனிப் பிறக் கப் போவதுமில்லை. துக்கத்தை மாயை என்ப தனுல் உலகம் என்னுவது, கடவுள் என்னுவது

என்பதை அவர் அறியாதவரல்லர். அவர் இரண்டும் இரண்டும் நாலு என்று படித்தவரே. ஆதலால், அவர் கூறிய விடை, தோண்டுபவர் அறிவினளவாக உண்மை துலக்குவதாகும். அஃதாவது, வாழ்க்கையில் மிகுந்து காணும் துக்கமெல்லாம் மெய்யே என்றாகிவிட்டால், கடவுளுக்குச் சிறப்புச் சிறிதுமில்லை. கடவுளுக்குச் சிறப்பில்லை என்பது எப்படிப் பொருந்துவதாம்? ஆகவே, துக்கம் மெய்யாகாது; துக்கம் மாயையே—என்பதாம்.

முற்றும் துறந்த மெய்ஞ்ஞானியருக்குச் சுகதுக்கங்களும், படைப்பும், படைத்தவனும் பொய்யே. அந்நிலையில் சச்சிதானந்த வள்ளல் என்பவரும் அவரவரே.

அந்நிலை எய்தாத வரையில் சிலருக்கு இன்பமும் துன்பமும், இறைவனின் திருவிளையாடல்களாம். சிலருக்கு, வாழ்க்கை இனிப்பதாம்; பலருக்கு, வாழ்க்கை புளிப்பதாம். சிலருக்கு இன்பம் மெய்யாவதாம்; பலருக்குத் துன்பமே மெய்யாவதாம்.

ஆகவே, 'அகம் பிரமம்' என்னும் ('தானே அது'வான) நிலை பெறாதவர்கள், வாழ்க்கையை எதுவெதுவாகவோ கருதி வருதல் இயற்கையே என்பது அவர் துணிபாகும்.

## 3

அடுத்த படியாக விடுகதைக்குப் பொருள் கூறுபவர் கார்லைல்[1] என்பவர். இவருக்கும் ஆதி

1. Carlyle

சங்கரருக்கும் உள்ள தாரதம்மியம் மடுவுக்கும் மலைக்குமுள்ளதாம்.

வாழ்க்கை என்பது கார்லைலுக்குக் குயவன் கைக் களிமண்ணே. குயவன் செய் பொருள்களில், கார்லைலுக்கினித்தவையாய் உள்ள பொருள்கள் பெரும்பாண்டங்களேயாம். இளஞ்சிறுர்கள் வைத்து விளையாடும் அழகிய செப்புக்கள், காதல் அரம்பையர்கள் கார்த்திகைத் தீபமேற்றும் அகல்கள், ஏழை மக்கள் கிட்டாதனவற்றைக் கிட்டுவதாக எண்ணி ஆசையுடன் பொருள் சேர்க்கும் உண்டிகள் என்னும் இவையெல்லாம், கார்லைலுக்கு இலட்சியமேயல்ல.

'விடுகதைக்குள் விடுகதையா?' என்பீர்கள். இவ்விடுகதை மிகவும் சுலபமானதே. குயவனே கடவுள். பாண்டங்களே படைப்புப்பொருள்கள். பெருத்த பாண்டங்களே சரித்திரத்தில் பேரும் புகழும் பெற்றவர்களாம். சிறுபாண்டங்கள் யாவை எனில்—**ஹானிபால், ஸீஸர், அலெக்ஸாண்டர், சாலமோன், நெப்போலியன்** என்னும் சிலரைத் தவிர—எஞ்சியுள்ள மற்ற அனைவரும்!

சரித்திரமெல்லாம் கார்லைலுக்கு இப்பெருநடிகர்களுக்கென்று எழுதப்பட்ட நாடகமேயாம். மேற்கூறிய பெருநடிகர்கள் மேடைக்கு வந்து திரைமுன் நடிக்கும்போதுதான் கார்லைலுக்குக் கண் விழிப்பு; கவனம்; 'பேஷ் பேஷ்!' என்ற தலையாட்டம். மற்றக் காலங்களிலெல்லாம் தூக்கத்திலுல் அவருக்குத் தலை சாய்வே!

அவர் வரையில் சரித்திரமென்பது ஆட்டு மந்தைகளும் பட்டி நாயுமே அடங்கிய ஒன்றும்! ஓர் ஆட்டு மந்தைக்கென்று ஒரு பட்டிநாய்! ஆயிரம் பேரை அடக்கியாள்வதற்கென்று ஒரு வல்லான்! ஆயிரம் ஆயிரமாய் ஆஞ்ஞை செய்வதற்கென்று ஒரு வல்லரசு! சரித்திரம் என்பதெல்லாம் அவருக்கு, ஒரு பட்டி நாய் எங்கே பிறந்தது எப்படி வளர்ந்து எவ்வாறு ஒரு மந்தை ஆடுகளை அரட்டி விரட்டிக் கடைசியில் ஒன்று திரட்டிப் பட்டியில் அடைத்தது என்னும் கதையேயாகும்.

## 4

கடைசியாகப் புதிர் விடுவிக்கவேண்டியவர் கார்ல் மார்க்ஸ் ஆவர். இவர் ஷேக்ஸ்பியர் போன்ற நாடகாசிரியர் அல்லர்; ஆதி சங்கரரைப் போன்ற மெய்ஞ்ஞானியரும் அல்லர்; கார்லைலைப் போல, வல்லான் வணக்கத்தில் ஈடுபட்டவருமல்லர். ஆகவே, சரித்திரம், பொருள் நூல், அரசியல், சட்டம் என்பவைகளையே வைத்துக்கொண்டு விடுகதைக்கு இவர் பொருள் கூறுதற்கும் ஏனையோரின் வழிக்கும் வித்தியாசமுண்டு.

முப்பது வருஷ காலம் ஆராய்ச்சி செய்து கடைசியாக ஏறக்குறையச் சரியே என்று இவர் கண்ட உண்மைகளாவன:

வாழ்க்கை என்பது பெரும்பாலும் உண்பதும் உடுப்பதும் உறங்குவதுமே; இவை கிட்டாத காலத்து, இவைகளுக்காகத் தேடியலைவ

---

* The reference is to Carlyle's conception of History and his pet theory of 'Heroes and Heroworship.'

தும், போட்டிபோடுவதும், சிற்சில சமயங்களில் போரிடுவதுமே வாழ்க்கையாம்.

சரித்திரம் என்பது ஒருவகுப்புக்கும் மற்றொரு வகுப்புக்குமிடையே ஏற்படும் போராட்டமேயாம்.

துக்கத்தை விளைப்பது அவரவர் செயலுமன்று; விதியுமன்று; சிலர் செய்யும் சதியேயாம்.

பொருளை விளைப்பது உழைப்பே.[1] உழைப்பின் ஊதியமே கூலி.[2] ஆனால், கூலி என்பது விளைத்த பொருளின் விலை மதிப்பில்[3] சிறிய பங்கேயாம். ஒரு ரூபாய் விலைமதிப்புள்ள சாமானைச் செய்தவனுக்கு ஒரு ரூபாய் கூலி அன்று. கூலி கொடுத்தது போக, ஒவ்வொரு ரூபாயிலும் சிறிதாவது மிஞ்சும். இப்படி மிஞ்சுவதெல்லாம் சேர்ந்தே மூலதனமாம்[4].

கூலிக்கு உழைப்பவனே தொழிலாளி. மூல தனம் சேர்ப்பவனே, முதலாளி. விலை மதிப்பு அத்தனையும் உழைத்தவருக்கே என்றால், சொத்துச் சேருவதும் மூல தனம் பெருகுவதும் முடியா.

* * *

கார்ல் மார்க்ஸ் அவர்களின் கொள்கைகளை விரித்துரைப்பதோ அல்லது மதிப்பிடுவதோ நமது கருத்தன்று. ஆகவே, ஜி. டி. எச். கோல்[5] என்பவரைப் பின்பற்றி, இவர் கொள்கைகளை விளக்குவனவாக இரண்டொன்று கூறுவோம்:

---

1. Labour
2. Wages
3. Price
4. Capital
5. Article on Karl Marx by G. D. H. Cole in the Encyclopaedia Brittanica (14th Edn.)

முதலாவதாக உள்ளது, வகுப்பு விவாதங்களே[1] சரித்திரத்தின் சாராமிசம் என்னப்படுவது. மார்க்ஸ் அவர்களின் கொள்கைப்படி, தொழிலுக்கிணங்க, உலக மக்கள் வகுப்பு வகுப்பாய்ப் பிரிகின்றார்கள். (ஜாதி, மதம், தேசம் என்பவை செய்யும் பிரிவினை வேறாம்.) இவ்வகுப்புக்களுள் உணவுக்காகவும், உடைக்காகவும், உறங்கும் இடத்திற்காகவும் போராட்டம் விளைகின்றது. இதுவே சரித்திரமாம்.

இக்கொள்கையை விளக்க ஆலமரம் தக்க உதாரணமாகிறது. ஆலமரம்; மரத்திலிருந்து விழுது; விழுது பூமியைத் தொட்ட இடத்தில் வேரூன்றி விழுதிலிருந்து மரம், மரத்திலிருந்து விழுது—என்னும் முறையிலேயே தொழிலிலிருந்து வகுப்புப் பிரிவினை; வகுப்புக்களுள் விவாதம்; விவாதத்திலிருந்து சமாதானம்; சமாதானத்திலிருந்து வேறு வகுப்புக்கள்; அவ்வகுப்புக்களுக்குத் தொழில்கள்; அத்தொழில்களிலிருந்து வகுப்புக்கள்[2]—என்னும் விதமாய் விளைவதையே சரித்திரமென்பார் கார்ல் மார்க்ஸ்.

அலெக்ஸாந்தர், ஹிட்லர் முதலியவர் நடித்த நாடகமே சரித்திரம் என்பதற்கும், அவர்கள் பெயரைக் குறிப்பதற்கும் இடமில்லாத மேற்கூறிய விளக்கத்திற்கும் எத்தனை வித்தியாசம் என்று யோசித்துப் பாருங்கள்!

இரண்டாவதாக, மார்க்ஸ் அறியப்படுவது 'மூலதனம் விளைவது எப்படி?' என்பதை எடுத்

---

1. Class struggle 2. Dialectical Materialism

துக் காட்டியதற்காக. இதை எளிதில் விளக்கி விடுவோம் :

நிலம் உழுபவன் உழவன்; விதை விதைப்பவன் உழவன்; நீர் பாய்ச்சுபவனும் உழவன்; கதிர் விளைப்பவனும் உழவனே! ஆனால், உழவன் விளைத்த நெல்லில் உழவனுக்குரியது. சிறிய பங்கே. மற்றவை உழவனுக்கில்லை.

உழவன் விளைத்த அவ்வளவு நெல்லும் உழவனுக்கே என்றால், சொத்து எப்படித் தோன்ற முடியும்? உழைத்தவன் விளைத்தும் அடையாத பாகமே சேர்ந்து சேர்ந்து சொத்து என்ற பெயர் பெறுகிறது.

சொத்து இல்லையானால், சிலர் ஒன்றுமே செய்யாது இலவசமாக வாழ்வது முடியாது. அவர்களும் உழைத்துத்தான் ஆகவேண்டும்.

அப்பொழுது ஒருவன் நூறு பசுக்களை மேய்ப்பான்; மற்றொருவன் நூறு கலம் நெல் விளைப்பான்; பின்னொருவன் நூறு ஆடை நெய்வான்; இப்படியாக ஒரு நாட்டில் நூறு பேர் இருந்தால், ஒவ்வொருவருக்குமாக ஒரு பசு, ஓர் ஆடை, ஒரு கல நெல்—என்று வேண்டும் பொருள் அத்தனையும் கிட்டுவனவாகும்.

சொத்து இல்லையாவதானால், ஒரு தேசத்தில் ஒவ்வொருவராக அனைவரும் விளைத்த அவ்வளவு தானியங்களும், செய்த அத்தனை பொருள்களும், ஆக்கிய அத்தனை பண்டங்களும், இன்னும் பல வஸ்துக்களும் அந்தத் தேசத்தில் உள்ள அனைவரில் ஒவ்வொருவருக்குமாகச் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்கப்படும். அங்நிலையில், ஒவ்வொரு

வருக்கும் போதிய நெல், புதிய ஆடை, இனிய விடுதி, வேண்டிய ஓய்வு, அறிவு பெருக்கச் சாதனங்கள் என்னும் எண்ணிறந்த வசதிகள் ஏற்படலாம்.

*　　　*　　　*

இவ்வாறு மனித சமூகத்தில் பொது உடைமையையும் சமத்துவத்தையும் ஏற்படுத்துவதில் எத்தனையோ கஷ்டங்களிருப்பதாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். வாஸ்தவந்தான்; புதியதாய் ஒன்றைச் செய்வதில் கஷ்டமில்லை என்று மறுப்பவர் யார்? ஆனால், உலகம் முழுதும் சமத்துவமும் பொது உடைமையும் பரவுவதனால் விளைவது நன்மையா தீமையா என்பது கம்பங்கொல்லைகளையோ நெல் வயல்களையோ பார்ப்பவருக்குப் புலப்படும்.

கொல்லைகளிலும் வயல்களிலும் காணும் பயிர் ஒவ்வொன்றிலும் கதிர்! ஒவ்வொன்றுக்கும் பூரண வளர்ச்சி! கிட்டத்தட்ட ஒவ்வொன்றுக்கும் சமமான உயரமும் பருமனும்!

இஃது எதனால் என்பது யோசிப்பவருக்கு விளங்கும். உழவன் நிலத்தை முதலில் மேடு பள்ளமில்லாமல் சமமாக உழுகிறான்; பிறகு சீராக எருவடிக்கிறான்; பிறகு பொதுவாக நீர் பாய்ச்சுகிறான். இதனால் பயிர் ஒவ்வொன்றுக்கும் வேண்டிய நீர், எரு, வளர இடம் என்பவைகளெல்லாம் அமைந்து, அவற்றுள் ஒவ்வொன்றும் சிறப்புற்று, இனிய கதிரை ஈனுகின்றது.

இதற்கு முற்றிலும் எதிரிடையான காட்சி வேண்டுமானால், ஓதியமரத்தையும் அதற்கு அருகிலுள்ள சிறு செடிகளையும் புல் பூண்டுகளையும் பாருங்கள். உரமெல்லாம் ஓதியமரத்துக்கே! பிற அனைத்தும் உரமில்லாமல், வளர்ச்சியும் குன்றி, முதிர்ச்சி பெறுவதற்குள்ளேயே இறக்கின்றன.

இனி நாம் விளைக்கவேண்டுபவை பசும்பயிர்களா அல்லது ஓதியமரங்களா என்பது அவரவரது அபிப்பிராயத்தைப் பொறுத்திருக்கிறது!

* * *

கார்ல் மார்க்ஸ் அவர்களின் உள்ளத்தில் பூத்த பூக்கள் பல. அவைகளிற் சில, காற்றடித்து உதிர்ந்தன; சில, புழுக்கள் அரித்து அழிந்தன; மற்றும் சில, மாலையாகச் சற்றுநேரம் விளங்கிப் பின் வாடி மடிந்தன.

பூத்துக் காய்த்தவை சிலவே. காய்த்தவைகளில் வெப்பம் தாங்காது வெம்பி விழுந்தன சிலவாம்; சிறுவர் கல்லடி பட்டுத் தரையிற் படிந்தன சிலவாம்.

பூத்துக் காய்த்துப் பழுத்தவை மிகச் சிலவே. அவற்றில் அணில் தின்றதொன்று. குரங்கு கடித்து மென்றதொன்று.

ஒரு கனியே மெய் சிதையாது முதிர்ந்ததாகும். அக்கனியை இரஷிய நாட்டில் நட்டுப் பயிர் செய்த காவற்காரன் பெயரே **லெனின்** என்பது.

வாழ்நாளில் கார்ல் மார்க்ஸ் முற்றிலும் தோற்றவரே எனினும், அவர் சவப்பெட்டி தரைமீதிறங்கியதுமே அவரது கொள்கைகள் பாசறையிலிருந்து கிளம்பித் திக்விஜயத்திற்குப் புறப்பட்டன என்னலாம்.






# அனுபந்தம்

---

## References for further study

### I. Galileo:

(a) A History of Science ... *Dampier*

(b) Social Relations of Science ... *Crowther*

(c) Science and Religion ... *Bertrand Russel*

(d) Article on 'Galileo' ... *Encyclopaedia Brittanica (14th Edn.)*

(e) "Dialogue concerning the two systems of the world" ... *Galileo (1636)*

(f) "Dialogues concerning two New Sciences." ... *Galileo (1638)*

### II. Darwin:

(a) Life of Charles Darwin ... *Thomas Huxley*

(b) The Scientific Outlook ... *Bertrand Russel*

(c) 'The Origin of Species'

(d) 'The Descent of Man'

(e) 'Expression of Emotions in Man and other Animals'

(f) 'Variation of Plants and Animals under domestication'

} *Darwin*

**III. Shelley:**

| | | |
|---|---|---|
| (a) | Life of Shelley | ... *Prof. Dowden* |
| (b) | 'Relics of Shelley' | ... *Dr. Garnett* |
| (c) | 'Shelley' (E.M.L. Series) | ... *J. Addington* |
| (d) | Ariel | ... *Andre Maurois (English translation.)* |
| (e) | Poems of Shelley | ... *Edited by W. M. Rossetti* |

(f) The Article on Shelley in Encycl. Britt. (14th Edn.) gives a good account of his life and works.

| **IV. Pearl Buck's Works:** | | | **Year** |
|---|---|---|---|
| (a) | East Wind-West Wind | ... | *1921* |
| (b) | The Young Revolutionist | ... | *1931* |
| (c) | Good Earth | ... | *1931* |
| (d) | A House Divided | ... | *1935* |
| (e) | House of Earth | ... | *1935* |
| (f) | The Exile and the Fighting Angel | | *1936* |
| (g) | This Proud Heart | ... | *1937* |
| (h) | Dragon's Teeth | ... | *1939* |

**V. Romain Rolland:**

| | **A**—Books written before *1914* | | **Year** |
|---|---|---|---|
| (a) | History of the Opera in Europe before Lulli and Scarlatti | ... | *1895* |
| (b) | History of the Theatre | ... | *1901* |
| (c) | Study on Millet | ... | *1902* |
| (d) | Beethoven and his Art | ... | *1903* |
| (e) | Michelangelo | ... | *1906* |
| (f) | Jean Christophe (*10 Volumes*) | ... | *1904—1912* |

**B**—Period *1914—1919*

The Articles published during that period have been collected and issued in the form of two books.

**C**—Period *1919—1945*

(a) The Soul Enchanted (*6 Volumes*) *1922–1929*

(b) Mahatma Gandhi ... *1924*

(c) Beethoven the creator ... *1929*

(d) '*I will not rest.*' ... *1935*

[This last is a good representative collection of Articles written after 1919 upto 1935.]

His studies on Ramakrishna Paramahamsa and Vivekananda are unique.

## VI. Karl Marx:

(a) Das Kapital *(3 Volumes)* ... *Karl Marx*

(b) 'Karl Marx' ... *Article in Encyl. Britt. (14th Edn.) by G. D. H. Cole*

[This Article is authentic and fair and contains full references for further study.]

